இந்த வாளை வழக்குமன்றம்
தையே சட்டம், என்றவர்

......சட்டம் ஒரு இருட்டறை
அதிலே வக்கீலின் வாதம்
ஒரு விளக்கு, என்று
வாதிடுகிறார். வார்த்தையல்ல
உண்மை!



கதை... புதுமை!
கரு... வளம்!
நகைச்சு... நல்லமுறை!
நட...களில் கலையழகு!
அனைத்...ன்றிய அழகு ஓவியம்

ஜூபிடரின்
# வேலைக்காரி

அறிஞர் அண்ணாதுரை தீட்டியது

தமிழ் நாடெங்கும் ..........
"ஒன்றே குலம் ஒருவனே தேவன்"
......என்று முழக்கி வருகிறாள்

சென்னை
பாரகன்
& லக்ஷ்மி

மார்ச் 30 முதல் ஆந்திர தேசமெங்கும் ஆரம்பம்
டைரக்ஷன்: ஏ.எஸ்.ஏ.சாமி · ஸ்டூடியோ: சென்ட்ரல்





# நவீன கவர்ச்சிகரமான மாதிரிகள்

ஜெனித் கெடிகாரங்கள் - சோத்தைப்போல் அவ்வளவு புதுமை யாகவும் சூரியனைப்போல அவ்வளவு குறிப்பாகவுமுள்ளன. புத்தம் புதிய மாதிரிகளில் ஏராளமான ஜெனித் கெடிகாரங்கள் தற்சமயம் வந்துள்ளன. கீழே இரண்டு புதுமாதிரிகள் படத்தில் விளக்கப்பட்டிருக்கின்றன. பேவர் - லூபா டைம்பீஸ்கள், கை கெடிகாரங்கள் ஆகியவைகளைப்பற்றிய விவரங்களடங்கிய அட்டவணைக்கு எழுதுங்கள் — அல்லது எங்கள் ஷோரூமுக்கு விஜயம் செய்யுங்கள்.

லேடீஸ் வாட்ச் நெ. 1397. *5′* *18* காரட் கோல்டு கேஸ். ஆப்டிக் கண்ணாடி அமைத்தது. ரூ. 320/-

ஆடவர்கள் வாட்ச் நெ. 1143. *7¾″* x *10″* ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்கேஸ், டைல் கண்ணாடி அமைத்தது. ரூ. 225/-

நெ. 1147. மேற்படி கடிகாரத்தைப் போலவேதான் ஆனால் *18* காரட் கோல்டு கேஸ். ரூ. 486/-



**ZENITH**

*Watches*




பேவர் - லூபா & கோ., லிட்., பம்பாய் & கல்கத்தா

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 8 | இதழ் 36
ஏப்ரல் 3
சர்வதாரி ௵ பங்குனி 21உ.



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

இப்பொழுது வெற்றிகரமாக நடைபெறுகிறது

# நல்ல தம்பி

என்னெஸ்கே பிலிம்ஸ் ரிலீஸ்

சென்னை

ஸ்டார்

மஹாராணி

ஸயானி

கபாலி

BALU BROS




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 36

என்ன செய்தி?

# மந்திரிமார் விளையாட்டு

மூன்று வருஷத்துக்கு முன்னால் சென்னை மாகாணத்துக் காங்கிரஸ் நிர்வாகிகள் செய்த சூழ்ச்சிகள் — தவறுகள் இவற்றின் பலனை சென்னை மாகாணம் நன்கு அநுபவித்து வருகிறது.

மந்திரி சபை அமைப்பதும் கலைப்பதும் திருப்பிச் சேர்ப்பதும் திரும்ப அழிப்பதும் ஏதோ ஒரு விளையாட்டைப் போல இந்தச் சென்னை மாகாணத்தில் நடைபெற்றுக்கொண்டு வருகிறது.

சட்ட சபை அங்கத்தினர்களும் காங்கிரஸ் நிர்வாகிகளும் மேற்படி மந்திரி சபை விளையாட்டை இந்தியா தேசம் முழுதும் பார்த்துச் சிரிக்கும்படியாக நடத்திவருகிறார்கள்.

ஒரு வாரத்துக்கு முன்னால் பம்பாயிலும் மத்திய மாகாணத்திலும் ஐக்கிய மாகாணத்திலும் வங்காளத்திலும் காங்கிரஸ் கட்சித் தலைவர்களின் தேர்தல் நடந்தது. முந்தைய வருஷத்துத் தலைவர்களே ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். பிரதம மந்திரி பதவியிலோ மந்திரி சபையின் அமைப்பிலோ ஒரு மாறுதலும் அந்த மாகாணங்களில் இல்லை.

பெரும்பாலான மாகாணங்களில் 1938-39-ல் காங்கிரஸ் பிரதம மந்திரியாயிருந்தவர்கள் இன்றளவும் பிரதம மந்திரியாயிருந்து பழைய மந்திரிகளின் துணையுடன் இராஜ்ய நிர்வாகத்தை நடத்திவருகிறார்கள்.

சென்னை மாகாணத்திலே மட்டுந்தான் வருஷந்தோறும் கட்சித்தேர்தல், அதற்குப் பலமான போட்டி, பிரதம மந்திரி மாறுதல், மந்திரிகள் மாறுதல்—ஆகிய கேலிக் கூத்துக்கள் எல்லாம் நடைபெற்று வருகின்றன. இந்தப் போட்டிகளிலும் மாறுதல்களிலும் ஏதாவது விசேஷப் பொருள் இருக்கிறதா, அவற்றுக்கு அவசியம் உண்டா, நியாயமான காரணங்கள் உண்டா,—என்று பார்த்தால் ஒன்றும் பிடிபடுவதாக இல்லை.

ஸ்ரீ ஓமந்தூர் ரெட்டியார் இரண்டு வருஷமாகப் பிரதம மந்திரி பதவி வகித்தார். காங்கிரஸ் திட்டங்களை எதிர்பார்த்த அளவுக்குமேல் நன்கு நடத்திவைத்தார். அரசியல் நிர்வாகத்தில் கூடுமான வரையில் ஊழல்களை ஒழித்து நேர்மைக்கும் திறமைக்கும் கௌரவத்தை அளித்தார்.

குற்றம் என்று சொல்லக் கூடியதாக ஓமந்தூர் ரெட்டியாரின் நிர்வாகத்தில் எதுவும் சொல்லப்படவில்லை. அவருடைய ஒழுக்கத்திலும் நடவடிக்கையிலும் யாரும் அப்பழுக்குச் சொல்லவில்லை.

ஆயினும் ஓமந்தூர் ரெட்டியாருக்குக் கட்சித்தலைவர் தேர்தலில் போட்டி ஏற்பட்டது. அவர் போட்டிக்கு நின்றால் தோற்றுப்போவார் என்று அவரைச் சேர்ந்தவர்களே சொன்னார்கள். ஆகையால் அவரை விலகிக் கொள்ளும்படி யோசனையும் சொன்னார்கள்.

ஸ்ரீ ரெட்டியார் தேர்தலுக்கு ஒரு நாளைக்கு முன்பு தம்முடைய குற்றங்குறைகளைப் பொருட்படுத்தாமல் தம்முடன் ஒத்துழைத்து ஒற்றுமையை நிலைநாட்டும்படி கேட்டுக் கொண்டார். அது பலன் தராமற் போகவே, தேர்தலுக்கு முதல் நாள் போட்டியிலிருந்து விலகிக் கொண்டார். தாம் விலகிக் கொள்வதால் ஒற்றுமை ஏற்படட்டும் என்றும் வேண்டிக் கொண்டார். ஓமந்தூராரின் மந்திரி சபை அத்தியாயம் இத்துடன் முடிந்தது.

மார்ச்சு 31உ வியாழக்கிழமை சுபதினத்தில் தலைவர் போட்டித் தேர்தல் நடந்தது. ஓமந்தூரார் வேண்டிக் கொண்டபடி ஒற்றுமை ஏற்படவில்லை. ஆறு மாதத்துக்கு முன்பு வரையில் ஓமந்தூராரைப் பலமாக ஆதரித்தவர்கள் இப்போது ஸ்ரீ பி.எஸ். குமாரசாமி ராஜாவை

# விடுதலைக் கொண்டாட்டம்



பாரதியார் பாடல்களின் சகல உரிமைகளும் பொது உடைமையாக வேண்டுமென்ற இலட்சியத்துடன் பாரதி விடுதலைச் சங்கத்தார் பெரு முயற்சி செய்து வந்தார்கள். அந்த முயற்சி வெற்றி யடைந்ததுபற்றி சென்ற மார்ச்சு மீ 20ந் தேதி சென்னை நகரிலுள்ள எழுத்தாளர்களையும் ரசிகர்களையும் அழைத்துச் சிற்றுண்டி விருந்தளித்து விழாக் கொண்டாடினார்கள். பாரதி விடுதலைச் சங்கத்தில் முக்கியஸ்தர்களான ஸ்ரீ நாரண துரைக்கண்ணன், ஸ்ரீ திரிலோக சீதாராம், ஆசிரியர் சீனிவாசராகவன் ஆகியவர்களை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

---

அபேட்சகராக நிறுத்தி வைத்தார்கள். "என்னுடைய மந்திரி சபையில் வேறு யாரை எடுத்துக் கொண்டாலும் டாக்டர் சுப்பராயனை எடுத்துக்கொள்ள மாட்டேன்" என்று ஒரு சமயம் கர்ஜித்த ஆந்திர கேசரி பிரகாசம் காரு டாக்டர் சுப்பராயனை நிற்க வைத்து ஆதரித்தார்.

போட்டியும் தேர்தலும் வோட்டு எண்ணலும் நடந்தன. ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜாவுக்கு 105 வோட்டுக்களும், டாக்டர் சுப்பராயனுக்கு 80 வோட்டுக்களும் கிடைத்தன.

ஸ்ரீ குமாரசாமி ராஜா காங்கிரஸ் கட்சித் தலைவர் ஆனார்; அதாவது பிரதம மந்திரி பதவியை அடைந்தார். நாம் இதை எழுதும்போது அவர் மந்திரி சபையை மாற்றி அமைத்துக் கொண்டிருக்கிறார்.

ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா மிக்க பெருந்தன்மை வாய்ந்த கனவான். நீண்ட கால தேச சேவை செய்த தேசபக்தர்; நிர்வாக அநுபவமும் ஓரளவு உள்ளவர். அவரைப் பற்றிக் குறிப்பாகக் குறை சொல்வதற்கு ஒன்றும் இல்லை.

ஆனாலும் சட்டசபைக் காங்கிரஸ் கட்சி ஏறக்குறைய இரு சம பகுதியாகப் பிரிவு பட்டிருக்கும் நிலைமையில் ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா சென்னை மாகாண அரசாங்கத்தை எப்படி நடத்திப் பெயர் சொல்லப் போகிறார் என்பது கவலைக்கிடமான விஷயம்.

ஓமந்தூராரைக் கைவிட்ட எம்.எல்.ஏ. பிரபுக்கள் ஸ்ரீ குமாரசாமி ராஜாவை மட்டும் எத்தனை நாள் தாங்கிக் கொண்டிருப்பார்கள் என்பதும் சந்தேகத்துக்கு இடமான விஷயம்.

புதிய பிரதம மந்திரி ஸ்ரீ குமாரசாமி ராஜாவுக்கு வாழ்த்துக் கூறி வரவேற்கிறோம். ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியாரின் அதிர்ஷ்டத்தைக் காட்டிலும் ஸ்ரீ ராஜாவின் அதிர்ஷ்டம் உயர்வாயிருக்கட்டும் என்று பிரார்த்திக்கிறோம்.

சென்னை மாகாணத்தில் சர்க்கார் நிர்வாகம் சீர்படவும், சென்னை மாகாணத்திற்கு ஏற்பட்டிருக்கும் அபகீர்த்தி மறைந்து பழையபடி அதன் புகழ் ஓங்கவும் கடவுள் அருள் பாலிப்பாராக.

## சட்டசபையில்!

-சாஸ்திரி

நிதி மந்திரி கனம் கோபால்ரெட்டி சட்ட சபையில் கேட்கப்படும் எந்தக் கேள்விக்கும் பளிச்சென்று பதில் சொல்லுவார். ஆனால் கேள்விக்கும் பதிலுக்கும் சம்பந்தம் இராது.

இப்போது இரவா? அல்லது பகலா?

இன்றைக்கு வெள்ளிக்கிழமை என்பது அங்கத்தினருக்கு ஞாபகம் இருக்கட்டும்!

சென்னை சர்க்காரிடம் திட்டங்கள் இல்லை என்று சென்னை அசெம்பிளி அங்கத்தினர் புகார் கூறியதற்கு கனம் கைத்தொழில் மந்திரி ஸ்ரீ சீதாராம ரெட்டியார் அளித்த பதில்:—"சர்க்கார் ஏராளமான திட்டங்களைப் போட்டு வைத்திருக்கிறார்கள். ஆனால், அவைகளை நிறைவேற்றத்தான் முடியவில்லை."



# நாடு செழிக்காதோ?

தற்சமயம் இந்தியாவின் முக்கியமான ஜீவாதாரப் பிரச்னை என்ன?

நாடு செழித்துச் சுபிட்சம் அடைய வழி என்ன என்பதுதான்.

1947-ம் வருஷம் ஆகஸ்டுமீ 15உ வரையில் இந்தியா தேசத்தில் சுதந்திரம் முக்கிய பிரச்னையாயிருந்தது.

மேற்படி தேதியில் இந்தியா சுதந்திரம் அடைந்து விட்ட பிறகு சுபிட்சம் முக்கிய பிரச்னையாகி விட்டது.

ஒரு தேசத்திற்கு எல்லாவற்றிலும் மிக முக்கியமான பிரச்னை சுதந்திரம்; இரண்டாவது முக்கியமான பிரச்னை சுபிட்சம்.

சுதந்திரமும் சுபிட்சமும் ஒன்றுக்கொன்று தொடர்பு உடையவை.

சுதந்திரம் இல்லாத நாட்டில் சுபிட்சம் மலர்வது அரிது; சுபிட்சம் இல்லாத நாட்டில் சுதந்திரம் நீடித்திருப்பது அரிது.

ஒரு தேசம் சுபிட்சத்தை அடைவது முதலாவதாக அந்த நாட்டின் இயற்கை வளத்தைப் பொறுத்தது; இரண்டாவதாக, அரசாங்கத்தார் கையாளும் பொருளாதார திட்டங்களைப் பொறுத்தது; மூன்றாவதாகப் பொது ஜனங்களின் ஊக்கத்தையும் ஒத்துழைப்பையும் பொறுத்தது.

## சர்வம் பற்றாக்குறை

இந்தியாவின் பொருளாதார நிலைமையில் இப்போது முக்கியமான அம்சமாக இருப்பது பற்றாக்குறை.

இந்திய மக்களின் நல்வாழ்வுக்கு அவசியமான சகல பொருள்களும் தற்சமயம் தேவையைக் காட்டிலும் குறைவாயிருக்கின்றன; குறைவாக உற்பத்தியாகின்றன.

உணவு பற்றாக்குறை; துணிமணி பற்றாக்குறை; வீடுகள் பற்றாக்குறை; வீடு கட்டும் சாமான்கள் பற்றாக்குறை; விவசாயத்துக்கு அவசியமான உரங்கள் பற்றாக்குறை; விவசாயக் கருவிகள் பற்றாக்குறை; இரும்பு பற்றாக்குறை; செமண்டு பற்றாக்குறை; இயந்திரங்களும் இயந்திரக் கருவிகளும் பற்றாக்குறை; புத்தகம், காகிதம் பற்றாக்குறை; பணம் பற்றாக்குறை!

நாடு சுபிட்சமாயிருப்பதற்கு நாட்டில் மக்களின் நல்வாழ்வுக்கு வேண்டிய சகல பொருள்களும் தாராளமாய்க் கிடைக்க வேண்டும். அவற்றை வாங்குவதற்கு மக்களிடம் பணமும் இருக்க வேண்டும்.

தானிய லக்ஷ்மியின் அருள் வேண்டும்! அத்துடன் தன லக்ஷ்மியின் கருணையும் சேர்ந்திருக்க வேண்டும்!

நூற்றைம்பது வருஷ அடிமை வாழ்விலும், அரசுபுரிந்த அன்னியர்கள் முன்யோசனையுடன் காரியம் செய்யாதபடியினாலும் மக்களின் வாழ்க்கைக்கு வேண்டிய சகல சாமான்களும் இந்தியாவில் பற்றாக்குறையாகிவிட்டன.

சாமான்கள் ஜனங்களின் தேவைக்குக் குறைவாயிருப்பதினால் விலைகள் ஏறிக்கொண்டே போகின்றன.

விலையேற்றத்துக்குத் தக்கபடி மக்களிடம் பணம் நிறைய இருக்கிறதா என்றால், அதுவும் இல்லை.

ஆகக்கூடி, தேசத்தில் தற்சமயம் சுபிட்சம் இல்லை; இம்மாதிரியே போய்க்கொண்டிருந்தால் துர்ப்பிட்சம் கூடிய சீக்கிரம் வந்து தொடரும். இந்த நிலைமைக்குப் பரிகாரம் என்ன? துர்ப்பிட்சம் வராமல் தடுக்க வழி என்ன? சுபிட்சம் பெருகச் செய்யும் மார்க்கம் என்ன?

## இங்கிலாந்தின் உதாரணம்

சென்ற மகாயுத்தம் 1945-ம் வருஷத்தில் நடைபெற்று முடிந்த பிறகு இங்கிலாந்தின் பொருளாதார நிலை மிக்க நெருக்கடியை அடைந்திருந்தது.

# தன தான்யம் செழிக்காதோ?

வெடி குண்டுகளினால் லட்சக்கணக்கான வீடுகள் அழிந்து போயிருந்தன. பல தொழிற்சாலைகள் நாசமடைந்திருந்தன. தொழில் வளம் குன்றியபடியால் சுபிட்சம் இல்லை. எல்லாப் பொருள்களும் பற்றாக் குறையாக இருந்தன. வெளிநாடுகளுக்குக் கடன் ஏராளமாகக் கொடுக்க வேண்டியிருந்தது. "இங்கிலாந்தின் நிலைமை என்ன ஆகுமோ?" என்று பல அரசியல் நிபுணர்கள் கவலை தெரிவித்திருந்தார்கள்; "இங்கிலாந்து இரண்டாந்தர அரசாகி விட்டது" என்றும் சிலர் சொன்னார்கள்.

மேதாவியான ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் இங்கிலாந்தின் பொருள் மந்திரியானார். தேசத்தின் பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்யவும் சுபிட்சத்தைப் பெருக்கவும் பெரு முயற்சி செய்தார். அவருடைய முயற்சி பெரும் வெற்றி தந்து விட்டது என்று சென்ற வாரத்தில் கிரிப்ஸ் துரையே சொல்லி விட்டார். இங்கிலாந்தின் பொருளாதார நிலை நெருக்கடி நிலையைத் தாண்டிவிட்டது என்று அறிவித்தார்.

யுத்தத்தின்போது அவ்வளவு மகத்தான கஷ்ட நஷ்டங்களை அநுபவித்த இங்கிலாந்து எப்படிப் பொருளாதார நெருக்கடியைத் தாண்டியது? அதற்கு என்னென்ன வழிகளை அநுசரித்தது?

அந்த வழிகள் இவைதான்: இங்கிலீஷ் மக்கள் சில காலத்துக்கு வயிற்றையும் வாயையும் கட்டிக் கொண்டிருந்தார்கள்; கிடைத்த அளவில் முக்கால் வயிறு உணவு சாப்பிட்டார்கள். மட்டமான துணியில் உடுப்பு அணிந்தார்கள்; தலைக்கு இரண்டு அல்லது மூன்று ஸூட்டுகளுக்கு மேல் பெரும்பாலானவர் வைத்துக் கொள்ளவில்லை. முதலாளிகள் எல்லாத் துறைகளிலும் பொருள் உற்பத்தியைப் பெருக்கினார்கள். தொழிலாளிகள் உற்சாகத்துடன் உழைத்து வேலை செய்தார்கள்; 'ஸ்டிரைக்' என்கிற பேச்சையே எடுக்கவில்லை. பொதுஜனங்கள் தங்கள் கையிலிருந்த பணத்தைப் பதுக்கி வைக்கவில்லை. பொருள் உற்பத்திக்குப் பயன்படுமாறு பாங்கிகளிலும் தொழில்களிலும் போட்டார்கள். பழைய மோட்டார்களைத் தாங்கள் வைத்துக்கொண்டு புதிதாக உற்பத்தியான மோட்டார்களையெல்லாம் வெளிநாடுகளுக்கு அனுப்பினார்கள். மட்ட ரகத் துணிகளைத் தாங்கள் அணிந்து கொண்டு உயர்ந்த ரகத் துணிகளையெல்லாம் வெளிநாடுகளுக்கு விற்றார்கள். இதன் மூலம் வெளிநாடுகளில் கிடைத்த பணத்தில் ஒரு பகுதியைக் கடன் கொடுத்துத் தீர்த்தார்கள். மற்றப் பகுதியைக் கொண்டு புதிய இயந்திரங்கள் முதலியன தருவித்தார்கள். புதிய இயந்திரங்களை ஸ்தாபித்து மேலும் அதிகமான பொருள் உற்பத்தி செய்தார்கள். இந்த முறையினாலேயே இங்கிலாந்து நெருக்கடி நிலையைத் தாண்டிச் சுபிட்சத்தின் எல்லைக் கோட்டுக்கு இப்போது வந்திருக்கிறது.

## சுபிட்சப் பாதை

இங்கிலாந்து அநுசரித்த முறையைத் தான் இந்தியாவும் கையாள வேண்டும்.

பொது மக்கள் இரண்டு மூன்று வருஷத்துக்கு வாயையும் வயிற்றையும் கட்டிக் கொள்ளவேண்டும். தேவைகளைக் குறைத்துக்கொள்ள வேண்டும். அத்தியாவசியமல்லாத பொருள்களை வாங்கக் கூடாது. செலவைக் குறைப்பதினால் மீதமாகும் பணத்தைச் சர்க்கார் கடன் பத்திரங்களிலோ பாங்கிகளிலோ போடவேண்டும்.

நாட்டில் புதிய புதிய தொழில்களை ஸ்தாபித்துப் பொருள் உற்பத்தியை ஏராளமாகப் பெருக்கவேண்டும்.

புதிய நிலங்களைப் பண்படுத்தியும் பழைய நிலங்களை வளப்படுத்தியும் உணவுப் பொருள் உற்பத்தியைப் பெருக்கவேண்டும்.

முதலாளிகள் சுயநலத்தை மறந்து தேச நலத்தைக் கருதித் தொழில்களை விஸ்தரிக்க வேண்டும்.

தொழிலாளிகள் பூரண உற்சாகத்துடன் உழைத்து வேலை செய்யவேண்டும்.

வெளி நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களையோ தினசரி உபயோகத்துக்கு வேண்டிய சாமான்களையோ தருவிக்கக் கூடாது.

கூடுமான வரையில் இந்த நாட்டில் உற்பத்தியான பொருள்களை ஏற்றுமதி செய்யப் பார்க்கவேண்டும்.

அப்போது வெளிநாடுகளிலே நமக்குச் சேரவேண்டிய பணம பெருகும். அந்தப் பணத்தைக் கொண்டு புதிய தொழில்களை ஆரம்பிப்பதற்கு அவசியமான இயந்திரங்களைத் தருவிக்கலாம்.

## பண வீக்கம்

நாட்டில் எல்லாப் பொருள்களின் விலைகளும் மிகவும் ஏறியிருக்கின்றன. இதன் காரணம் என்ன?

அகவிலை ஏறுவதற்குச் சிலசமயம் 'பண வீக்கம்' காரணமா யிருக்கக் கூடும்.

அதாவது சர்க்கார் ஏராளமாக நோட்டுகளை அச்சிட்டு விநியோகித்துக் கொண்டிருந்தால் பணப் புழக்கம் அதிகமாகும். சாமான்களை அதிக விலைக்கு வாங்க ஜனங்கள் தயாரா யிருப்பார்கள்.

இந்தியாவில் பிரிட்டிஷ் சர்க்கார் 1940-ம் ஆண்டிலிருந்து நோட்டுச் செலாவணியை அதிக மாக்கி வந்தார்கள். யுத்த காலத்தில் மளமள வென்று பெருகிவந்த சைன்யத்துக்குச் சம்பளம் கொடுக்கவும் யுத்த தளவாடங்களும் சைன்ய சாமக்கிரியைகளும் வாங்கவும் ஏராளமாகப் பணம் வேண்டியிருந்தபடியால் நோட்டுகளை அச்சடித்துத் தள்ளினார்கள்.

1939-ம் ஆண்டில் இந்தியாவில் நோட்டுச் செலாவணி 238 கோடி ரூபாய். 1945-ல் ஆயிரத்து இருநூறு கோடி ரூபாய். எனவே, அந்த ஐந்து வருஷத்தில் இந்தியாவில் 'பண வீக்கம்' ஏற்பட்டு வந்தது என்று கூறலாம். (ஆனால் இந்தியாவைப் போன்ற ஒரு பெரிய தேசம் தாங்க முடியாத பண வீக்கம் அல்ல.) அந்த ஐந்து வருஷத்தில் அகவிலை ஏறியதற்கு, சாமான்கள் குறைவாயிருந்தது, நோட்டுச் செலாவணி அதிகமானது ஆகிய இரண்டு காரணங்களையும் சொல்லலாம்.

1946-க்குப் பிறகு நோட்டுச் செலாவணி ஏறக்குறைய ஒரே நிலையில் இருக்கிறது; அதிகமாகவில்லை. ஆனால் அகவிலை மட்டும் ஏறிக்கொண்டே வருகிறது. இதற்குக் காரணம் என்ன? சாமான்களின் உற்பத்தி குறைவா யிருப்பதுதான்.

## பணத் தேக்கம்

மூன்று வருஷத்துக்கு முன்னால் இருந்த நோட்டுச் செலாவணியே இப்போதும் இருக்கிறது. ஆனால் முன்னை விடப் பணக் கிராக்கி அதிகமா யிருக்கிறது.

இந்தியாவிலுள்ள பாங்கிகளில் டெபாஸிட்டுகள் சென்ற ஒரு வருஷ காலத்துக்குள்ளே 675 கோடியிலிருந்து 600 கோடிக்கு வந்திருக்கின்றன. அதாவது 75 கோடி குறைந்து விட்டது.

இந்தப் பணம் எங்கே போயிற்று? பாங்கிகளில் மட்டும் அல்லாமல் தொழில்களிலும் மூலதனம் குறைந்திருக்கிறது; வியாபாரங்களிலும் மூலதனம் குறைந்திருக்கிறது.

இதற்கெல்லாம் காரணம் என்ன?

**பணத் தேக்கந்தான்!**

பல நூறு கோடி ரூபாய் பணம் புழக்கத்தில் இராமல் எங்கேயோ தேங்கி யிருக்கிறது. தேங்கியிருக்கும் இடம் எங்கே?

சுதந்திர சர்க்காரின் தீவிர நடவடிக்கைகளுக்குப் பயந்து கொண்டு கறுப்பு மார்க்கெட் வியாபாரிகள் சிலர் பணத்தைப் பதுக்கி வைத்திருக்கிறார்கள். பணத் தேக்கத்துக்கு இது ஒரு காரணம்.

இன்னொரு காரணம், முன்னைக்காட்டிலும் அதிகமான பணம் கிராமங்களுக்குப் போயிருப்பதுதான்.

பட்டணங்களில் உள்ள பணம் பெரும்பாலும் பாங்கிகளிலும் தொழில்களிலும் வியாபாரங்களிலும் புழங்கிக் கொண்டிருக்கும்.

ஆனால் கிராமங்களுக்குப் போகும் பணம் சட்டிப் பானைகளுக்குள்ளேயும் தகரப்பெட்டிகளுக்குள்ளேயும் போய் விடும்: அவை திரும்ப வெளி வருவது மிகவும் சிரமம்.

சென்ற இரண்டு வருஷத்தில் சுதந்திர சர்க்காரின் திட்டங்களினால் முன்னைக்காட்டிலும் அதிகமான பணம் கிராமங்களுக்குப் போயிருக்கிறது.

உதாரணமாக, சென்னை மாகாணத்தில் மதுவிலக்கினால் சர்க்கார் 17 கோடி ரூபாய் நஷ்டமடைந்தனர். எனவே, கிராமவாசிகள் குறைந்த பட்சம் 40 கோடி ரூபாய் லாபம் அடைந்திருக்கிறார்கள்.

விவசாயிகள் விற்பனை செய்யும் நெல்லுக்கு முன்னைக்காட்டிலும் ஏறக்குறைய ஒட்டிக்கு

இரட்டிப்பு விலை பெறுகிறார்கள். மற்ற விவசாயப் பொருள்களுக்கும் இப்படியே.

கிராம வாசிகளின் விளைபொருள்களுக்கு நல்ல விலை கிடைக்க வேண்டியதுதான். இன்னும் அதிக விலைகூடக் கொடுக்கலாம்.

அவ்விதமாகவே மதுவிலக்கினால் கிராம வாசிகள் அடையும் லாபத்தைக் குறித்து நாம் பெரிதும் மகிழ்ச்சி அடைய வேண்டும்.

ஆனால் எதைக் குறித்து மகிழ்ச்சி அடையக் கூடாது என்றால், கிராமங்களுக்குப் போகும் மேற்படி பணமெல்லாம் அங்கேயே தங்கிவிடுவதைக் குறித்துத்தான்.

இந்தியாவின் தற்காலத்துப் பொருளாதார நிலைமையில் பணத்தைப் பதுக்கி வைப்பது அல்லது தேக்கி வைப்பதைப்போன்ற பிசகு வேறொன்றுமில்லை.

ஜனங்கள் தங்களிடம் அதிகப்படியாயுள்ள பணத்தைச் சர்க்கார் கடன் பத்திரங்களிலோ, பாங்கிகளிலோ போட்டால், அந்தப் பணம் வியாபாரம், கைத்தொழில் முதலியவற்றுக்கு மூலதனமாகப் பயன்படும். இது நாட்டின் சுபிட்சத்துக்குக் காரணமாகும். பதுக்கியோ புதைத்தோ வைத்திருந்தால் யாதொரு பயனும் ஏற்படாது.

கறுப்பு மார்க்கெட் முதலாளிகள் பதுக்கி வைத்திருக்கும் பணத்தை வெளிப்படுத்தச் சர்க்கார் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும்.

மூன்றொரு தடவை ஆயிரம் ரூபாய் நோட்டுகள் செல்லாது என்று சர்க்கார் உத்தரவு போட்டபோது தேக்கி வைத்திருந்த பணம் ரொம்பவும் வெளியாயிற்று.

அம்மாதிரி தீவிர நடவடிக்கை ஏதாவது மீண்டும் எடுக்க வேண்டும்.

இத்தனை பெறுமானத்துக்கு மேல் நோட்டாகவோ, ரூபாயாகவோ, நகைகளாகவோ, தங்கக் கட்டியாகவோ பதுக்கி வைத்திருப்பது சட்ட 'விரோதம் என்று ஆக்கப்பட வேண்டும்.

கிராமவாசிகளிடம் தனித்தனியாக அதிகப் பணம் இராது. ஆனால் பல துளி பெரு வெள்ளம் ஆவதுபோல் பல பேரிடமுள்ள சிறு தொகைகள் மொத்தத்தில் பல கோடி ரூபாய் ஆகிவிடும்.

கிராமவாசிகளிடம் சேர்ந்த பணம் அப்படியே சட்டிப் பானையில் தூங்காமல் கைத்தொழில் பெருக்கத்துக்குப் பயன்படுவது மிகவும் அவசியம்.

## தங்க இறக்குமதி

கிராமங்களில் உள்ள பணத்தைத் தேச நன்மைக்குப் பயன்படுத்த வழி என்ன? சர்க்கார் கடன் பத்திரங்களில் போடும்படி பிரசாரம் செய்வது ஒரு வழி. இந்தப் பிரசாரம் இப்போது பட்டணங்களில் நடைபெறுகிறது. அதில் பிரயோஜனமில்லை. கிராமங்களில் பிரசாரம் செய்ய வேண்டும்.

யுத்த காலத்தில் பிரிட்டிஷ் சர்க்காருக்காக யுத்தக் கடன்களும் யுத்த நிதிகளும் நம் உத்தியோகஸ்தர்கள் எவ்வளவு ஊக்கத்துடன் சேகரம் செய்தார்கள்?

அம்மாதிரி இப்போதும் சுதந்திர சர்க்கார் வறுமையுடன் நடத்தும் பெரும் யுத்தத்திற்காக உத்தியோகஸ்தர்கள் கடனும் நிதியும் வசூலிக்க வேண்டும். இது ஒரு வழி.

"சித்தனை" என்னும் சிறந்த பத்திரிகையில் பொருளாதார ஆசிரியர் டி. வி. ராமாநுஜம் ஒரு யோசனை சொல்லியிருக்கிறார். அமெரிக்காவில் இப்போது தங்கம் ஏராளமாயிருக்கிறது. இந்தியாவில் விற்கும் விலைக்குப் பாதி விலைக்குக் கிடைக்கும்.

நம்முடைய கிராமத்து ஜனங்களுக்குத் தங்கத்திலும் தங்க நகைகளிலும் விசேஷப் பிரமை உண்டு; தங்கம் கொஞ்சம் குறைந்த விலைக்கு விற்றால் ஏராளமாக வாங்குவார்கள். சட்டியிலும் பெட்டியிலும் உள்ள பணம் வெளியில் வரும்.

இந்திய சர்க்கார் அமெரிக்காவிலிருந்து சவரன் எடை 35 ரூபாய் வீதம் வாங்கி இந்தியாவில் 50 ரூபாய் வீதம் விற்பதாக வைத்துக் கொள்வோம். சர்க்காருக்கு லாபம் வரும். அதோடு ஜனங்களிடம் தேங்கியுள்ள பணம் புழக்கத்துக்கு வரும்.

நம்முடைய நிதி மந்திரி ஸ்ரீ கோபால ரெட்டி சமீபத்தில் "தேசத்தின் நன்மைக்காகத் தங்க நகை போட்டுக் கொள்ளக் கூடாது" என்று சொன்னார். இந்தப் பிரசாரம் செய்யவேண்டிய சமயம் இதுவல்ல. தங்கத்தை விற்பதற்குப் பதிலாகத் தங்கத்தை வாங்கச் சொல்ல வேண்டிய சமயம் இது. தேச மக்களிடம் தங்கம் இருப்பது தேசத்தின் பொருளாதாரத்துக்கு நன்மை. நமது நாணயச் செலாவணி பிரான்ஸ், ஜெர்மனி, ஜப்பான் முதலிய தேசங்களைப்போல் நிலைகுலைந்து விழாமலிருப்பதற்கு மக்களிடம் உள்ள தங்கம் உதவியாயிருக்கும். எந்தச் சமயமும் பொதுஜன சர்க்கார் அதைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

# பொதுமையாக்கும் திட்டம்

சுதந்திரம் அடைவதற்கு முன்னல் இந்தியா சுயராஜ்யம் அடைந்ததும் தொழில்களை யெல்லாம் பொதுமக்களின் உடைமையாக்கிச் சர்க்காரில் நிர்வாகம் செய்யப் போகிறோம் என்று காங்கிரஸ் தலைவர்கள் சொல்லி வந்தார்கள்.

இந்த இலட்சியம் உத்தமமான இலட்சியந்தான். ஆனால் தற்சமயம் பூரணமாக அமுலுக்குக் கொண்டுவரக் கூடியதல்ல.

தொழில்களைச் சர்க்கார் எடுத்துக் கொண்டு நடத்துவதற்குத் திறமையுள்ள நிர்வாக உத்தியோகஸ்தர்கள் நிறைய வேண்டும்.

இப்போது சர்க்கார் நிர்வாகத்தைச் சரியாக நடத்துவதற்கே போதிய திறமையாளர் இல்லை. நிர்வாகத் திறமையும் அநுபவமும் உள்ள ஆங்கில உத்தியோகஸ்தர்கள் பலர் சீமைக்குப் போய்விட்டார்கள்.

பாக்கியுள்ளவர்களைக் கொண்டு சர்க்கார் இலாகாக்களை நடத்துவதே பிரம்மப் பிரயத்தனமா யிருக்கிறது.

சர்க்கார் உத்தியோக வர்க்க ஊழல்களைப் பற்றிய புகார்கள் காதைத் துளைக்கின்றன.

இத்தகைய நிலைமையில் தொழில்களைப் பொதுமையாக்கும் திட்டத்தை விஸ்தாரமாக எப்படி நடத்த முடியும்?

இதுமட்டு மல்லாமல், தொழில்களைப் பொதுமையாக்கப் போகிறோம் என்ற பேச்சினால் பணக்காரர்கள் தங்களிடமுள்ள பணத்தைத் தொழில்களில் போடத் தயங்கினார்கள். "இன்றைக்குப் பணத்தைப் போடுகிறோம்; நாளைக்குச் சர்க்கார் எடுத்துக்கொண்டு விட்டால் என்ன செய்கிறது?" என்று கேட்டார்கள்.

இவர்களுக்குத் தைரியமூட்டுவதற்காக இந்திய சர்க்கார் ஒரு சாது முறையைக் கையாளுகின்றனர். ஏற்கெனவே நடைபெறும் தொழில்களைச் சர்க்கார் அடுத்த பத்து வருஷத்துக்கு எடுத்துக்கொள்ளப் போவதில்லை யென்று வாக்குறுதி கொடுத்திருக்கிறார்கள்.

புதிதாக எத்தனையோ ஜீவாதாரப் பெருந் தொழில்களை ஆரம்பிக்கவேண்டி யிருக்கிறது. அவற்றைப் பொதுமைத் தொழில்களாக இந்திய சர்க்கார் ஆரம்பித்து நடத்துவார்கள்.

தொழில்களைப் பொதுமையாக்கும் திட்டத்தைத் தள்ளி வைப்பதுபோல் நிலங்களைப் பொதுமையாக்கும் பேச்சையும் கொஞ்ச காலைக்குத் தள்ளிவைப்பது நல்லது.

தொழில் வளத்துக்கு மூலதனம் எவ்வளவு அவசியமோ, அப்படியே விவசாய வளர்ச்சிக்கும் மூலதனம் அவசியம்.

யுத்தகாலத்திலும் யுத்தம் முடிந்த பிறகும் நகரத்துப் பணக்காரர்கள் பலர் விவசாயத் துறையில் பணம் போடத் தொடங்கினார்கள். தரிசு நிலங்களைப் பண்படுத்திச் சாகுபடிக்குக் கொண்டுவந்தார்கள்.

இரண்டு வருஷமாக இது நின்றுபோய் விட்டது. காரணம், நில உரிமை சம்பந்தமாகச் சில தேசபக்தர்கள் வெளியிட்ட அபிப்பிராயங்கள்தான்.

இதனாலேயே பழைய நிலச்சுவான்தார்களும் நிலத்தை நிரந்தரமாக வளப்படுத்துவதில் பணம் செலவிடத் தயங்குகிறார்கள்.

'சுவரை வைத்துக் கொண்டு சித்திரம் எழுத வேண்டும்' என்பது அறிவு செறிந்த பழமொழி.

நாட்டில் தொழில்வளம் பெருகி உணவு உற்பத்தி அதிகமாகிச் சுபிட்சம் நிலை பெற்றால், பிறகு பொது உடைமைத் தத்துவங்களை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு வேண்டிய வசதியும் அவகாசமும் இருக்கும்.

முதலிலேயே தொழில்களையும் நிலங்களையும் பொது உடைமையாக்குவது பற்றிப் பேசினால், நுனி மரத்திலிருந்து அடி மரத்தை வெட்டுவதாக முடியும்!

* * *

மொத்தத்தில் நாட்டுக்கு இப்போது வேண்டியது எல்லாத் துறைகளிலும் உற்பத்திப் பெருக்கம். உற்பத்தி பெருகுவதற்கு மூலதனம் தேவை.

நம் நாட்டு மக்களிடம் சிறு தொகைகளாகவும் பெருந் தொகைகளாகவும் உள்ளவற்றை யெல்லாம் பெரும் பிரயத்தனம் செய்து சேகரித்துத் தொழில்களுக்கு மூலதனமாக உபயோகப்படுத்த வேண்டும்.

நாட்டில் தொழில் வளத்தையும் உற்பத்தியையும் பெருக்குவதிலேயே முதலாளிகள், தொழிலாளிகள், பொது ஜனங்கள்—ஆகிய அனைவரும் கொஞ்ச காலம் கவனம் செலுத்த வேண்டும்.

இந்தியா தேசத்தின் க்ஷேமத்துக்கும் தற்சமயம் மேற்கூறியதுதான் சரியான பாதை. நாடு செழிக்கவும் ஜன நாயகம் பெருகவும் வழி அதுவேதான்.

# பாரதியார் சங்கம்

சென்ற மார்கழி மாதம் 17-ம் தேதி ஒரு சுப தினம்; தமிழ் இலக்கியத் துறைக்கு ஒரு விசேஷமான தினம். அன்று பாரதியார் சங்கம் ரிஜிஸ்தர் செய்யப்பட்டது. அதாவது தமிழ்த்தாய்க்குத் தொண்டு செய்வதற்கு ஒரு நிரந்தரமான ஸ்தாபனம் ஏற்பட்டது.

பாரதியார் சங்கம் அமைப்பது சம்பந்தமான திட்டத்தை 2—10—48 "கல்கி" இதழில் நேயர்கள் படித்திருப்பார்கள்.

எட்டயபுரத்தில் உள்ள பாரதியார் மண்டபத்தையும் அதிலுள்ள புத்தக சாலையையும் பராமரித்தல், ஆண்டு தோறும் எட்டயபுரத்தில் பாரதி விழா நடத்துதல், பாரதியாரின் கவிதைகளையும் வசன இலக்கியத்தையும் பரப்புதல், பாரதியார் கீதங்கள் நாடெங்கும் முழங்கும்படி செய்தல் ஆகிய நோக்கங்களுடன் பாரதியார் சங்கம் அமைக்கப்பட்டிருக்கிறது.

நாடெங்குமுள்ள தமிழ் அன்பர்களும் பாரதியாரின் பக்தர்களும் பாரதியார் சங்கத்தில் அங்கத்தினராகச் சேரலாம். அவர்கள் செலுத்த வேண்டிய வருஷ சந்தா ரூபாய் ஆறுதான்.

சந்தா செலுத்தி அங்கத்தினரானவர்களுக்கு எட்டயபுரத்தில் நடைபெறும் ஆண்டுவிழா சமயத்தில் கூடுமானவரை வசதிகள் செய்து கொடுக்கப்படும்.

சங்கத்தின் நோக்கங்களை நிறைவேற்றி வைக்கும் திருப்பணியைச் செய்வதற்காக நிர்வாக சபை ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த முதல் நிர்வாக சபையைப் பாரதி மண்டப டிரஸ்டிகள் நியமனம் செய்தார்கள். முதல் நிர்வாக சபை இரண்டு வருஷத்துக்குப் பொறுப்பு வகிக்கும். பிறகு பாரதியார் சங்கத்து அங்கத்தினர்களின் பொதுக் கூட்டத்தில் நிர்வாக சபை தேர்ந்தெடுக்கப்படும். நிர்வாக சபைத் தேர்தல் இரண்டு வருஷத்துக்கொரு முறை நடைபெறும்.

சங்கத்தின் விதிமுறைகள் அச்சிடப்பட்டு வருகின்றன. அச்சானதும் சங்கத்தின் அங்கத்தினருக்கும் மற்றும் எழுதிக் கேட்கும் அன்பர்களுக்கெல்லாம் அதன் பிரதி அனுப்பி வைக்கப்படும்.

## அங்கத்தினர்

இது வரையில் 84 தமிழ் அன்பர்கள் வருஷ சந்தா ஆறு ரூபாய் செலுத்திப் பாரதியார் சங்கத்தில் அங்கத்தினராகச் சேர்ந்திருக்கிறார்கள். ஆங்காங்குள்ள பாரதி பக்தர்கள் இன்னும் பல அங்கத்தினரைச் சேர்த்துக் கொடுத்து உதவுமாறு கோருகிறோம். இன்றுவரை சேர்ந்துள்ள அங்கத்தினர்களின் பெயர்கள் வருமாறு:—

திருப்புகழ் மணி ஸ்ரீ டி. எம். கிருஷ்ணசாமி ஐயர், சென்னை.

ரஸிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார், குற்றாலம்.

கனம் ஸ்ரீ கே. மாதவமேனன், விவசாய மந்திரி, சென்னை.

ஸ்ரீமதி குட்டிமாளு அம்மாள், எம். எல். ஏ., சென்னை.

கனம் ஸ்ரீ எம். பக்தவத்ஸலம், பொதுமராமத்து மந்திரி, சென்னை.

ஸ்ரீ பி. எஸ். கிருஷ்ணன், நேமத்தான்பட்டி.

ஸ்ரீ எம். துரைசாமி நாடார், தூத்துக்குடி.

ஸ்ரீ ஜே. குழந்தை, தூத்துக்குடி.

ஸ்ரீ வி. எஸ். வேங்கடாச்சாரி, விட்டலபுரம்.

ஸ்ரீமதி ஆண்டாளம்மாள், விட்டலபுரம்

ஸ்ரீமதி பத்மா, விட்டலபுரம்.

ஸ்ரீமதி ஆர். வி. சாஸ்திரி; சென்னை.

ஸ்ரீ ஆர். அமிர்தசாமி, எட்டயபுரம்.

ஸ்ரீ சி வி. ஆர்எம். அழகப்பச் செட்டியார், காருடைகசந்தான்.

ஸ்ரீ எம். கந்தசாமி செட்டியார், எட்டயபுரம்.

ஸ்ரீ டி. கே. கிருஷ்ணன், தென்திருப்பேரை.

ஸ்ரீ என். திருமலை, தென்திருப்பேரை.



"ஸ்வாமி, பகவானே! என் பிள்ளை பரீட்சையிலே பாஸ் பண்ண அருள் புரிய வேணும்."

"அப்படி வேண்டிக் கொள்ளாதே அம்மா! 'என் பிள்ளை கஷ்டப்பட்டுப் படிச்சிருக்கான். இந்தத் தடவையும் பேப்பர் அவுட் ஆகாமல் காப்பாத்த வேணும்' என்று வேண்டிக்கொள்!"

ஸ்ரீ ஜி. எஸ். ராஜுக், எட்டயபுரம்.

ஸ்ரீமதி ருக்மணி கிருஷ்ணசாமி அய்யர், செங்கோட்டை.

ஸ்ரீ எஸ். கோபாலகிருஷ்ணன், 'கல்கி' ஏஜெண்ட், திருநெல்வேலி.

ஸ்ரீ வி. எஸ். வி. மணி, இண்டியன் ஓவர்ஸீஸ் பாங்கு லிமிடெட், மதுரை.

ஸ்ரீ கே. மகாலிங்கம், (பகீரதன்), 'கல்கி' காரியாலயம், சென்னை.

ஸ்ரீ ஓ. எஸ். நாச்சியப்பன், கல்லல்.

ஸ்ரீ ஜி. கே. பட்டாபிராமன், திருச்சி.

ஸ்ரீ டி. லக்ஷ்மணன், எழும்பூர்.

ஸ்ரீமதி பி. ஆர். திலகம், திருவாரூர்.

ஸ்ரீ வி. கோவிந்தராஜன், பழனி.

ஸ்ரீ பி. எஸ். நமச்சிவாயம், பங்களூர்.

ஸ்ரீ கே. மாரியப்ப நாடார், எட்டயபுரம்.

ஸ்ரீ எஸ். கிருஷ்ணு, புதுச்சேரி.

ஸ்ரீ ஏ. எஸ். சங்கரநாராயணச் செட்டியார், ஸ்ரீவில்லிப்புத்தூர்.

ஸ்ரீ எம். கே. வீரபாகுப் பிள்ளை, தூத்துக்குடி.

ஸ்ரீ ஹரிஹர சர்மா, சென்னை.

ஸ்ரீ கே. சுப்ரமணியம், எம். எல். ஏ., (சுப்சி.) கோயமுத்தூர்.

ஸ்ரீ எஸ். மீனாட்சிசுந்தரம், சங்கரன்கோவில்.

ஸ்ரீ ஏ. வி. நாராயணன், அருப்புக்கோட்டை

ஸ்ரீ டி. பி. சுப்பய்யா, எட்டயபுரம்.

தலைவர், பாரதிவாசிபர்சங்கம், ஒடுகாத்தூர்.

ஸ்ரீ வ. ரா., நுங்கம்பாக்கம், சென்னை.

டாக்டர் ஸி. டி. தேசிகாச்சாரி, நுங்கம்பாக்கம், சென்னை.

ஸ்ரீ பி. கே. வி. எஸ். மணி, எட்டயபுரம்.

எட்டயபுரம் மகாராஜா, எட்டயபுரம்.

ஸ்ரீ ஏ. சோமலை, கொழும்பு.

ஸ்ரீ டி. சாமிநாதன், எட்டயபுரம்.

டாக்டர் ஆர். சீனிவாசன், எட்டயபுரம்.

ஸ்ரீ செல்லைய ரெட்டியார், வேலாயுதபுரம்.

ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி, ஆசிரியர், 'கல்கி'.

ஸ்ரீ டி சதாசிவம், மானேஜர், 'கல்கி'.

ஸ்ரீ என். வெங்கட்ராம், அக்கவுண்டண்ட், 'கல்கி' காரியாலயம், சென்னை.

ஸ்ரீ பி. எஸ் குமாரசாமி ராஜா, எம். எல். ஏ. ராஜபாளையம்.

ஸ்ரீ ஏ. வேதரத்தினம், எம். எல். ஏ. வேதாரண்யம்.

ஸ்ரீ நா. கு. நாராயணசாமி செட்டியார், 123, பெரிய பஜார், திருச்சி

ஸ்ரீ ஆ. தங்கசாமி நாடார், எட்டயபுரம்.

ஸ்ரீ கா. சுலைமான் ராவுத்தர், எட்டயபுரம்.

ஸ்ரீ கணபதி சுப்ரமணிய ஐயர், எட்டயபுரம்.

ஸ்ரீ கருப்புசாமி முதலியார், எட்டயபுரம்.

ஸ்ரீ கா. ராமலிங்கம் ஆசாரி, எட்டயபுரம்.

ஸ்ரீ கிருஷ்ணன் செட்டியார், எட்டயபுரம்.

ஸ்ரீ சங்கரன் செட்டியார், எட்டயபுரம்.

ஸ்ரீ ப. சோ. ஆதிமூலம் ஆசாரி, எட்டயபுரம்.

ஸ்ரீ பொன்னுசாமி செட்டியார், எட்டயபுரம்.

ஸ்ரீ சுப்ரமணியம் செட்டியார், எட்டயபுரம்.

ஸ்ரீ ரா. சேர்மன், எட்டயபுரம்.

ஸ்ரீ ந. மு. கைலாசசுந்தரம், எட்டயபுரம்.

ஸ்ரீ எம். கிருஷ்ணன், செய்துங்கநல்லூர்.

ஸ்ரீ பர்ஜுந்து. செய்துங்கநல்லூர்.

ஸ்ரீ நாராயணய்யங்கார், விட்டலபுரம்.

ஸ்ரீ சுந்தரராஜய்யங்கார், விட்டலபுரம்.

ஸ்ரீ சுப்ரமணியம், விட்டலபுரம்.

ஸ்ரீ கோமதிநாயகம் பிள்ளை, மோரப்பநாடு.

ஸ்ரீ எஸ். முத்தையா, பிராஞ்சு போஸ்ட் மாஸ்டர், மோரப்பநாடு.

ஸ்ரீ எம். எஸ். கணபதி, மோரப்பநாடு.

ஸ்ரீ எம். பி. கைலாசம், மோரப்பநாடு.

ஸ்ரீ பி. முருகப்பப் பிள்ளை, மோரப்பநாடு.

ஸ்ரீ சன்வரன். மோரப்பநாடு.

ஸ்ரீ கந்தசாமித் தேவர், சென்னல்பட்டி.

ஸ்ரீ மு. ராமலிங்கத் தேவர், சென்னல்பட்டி.

ஸ்ரீ சி. சிதம்பரத் தேவர், சென்னல்பட்டி.

ஸ்ரீ அ. ராமசாமித் தேவர், சென்னல்பட்டி.

ஸ்ரீ ராமாநுஜம், ஆழ்குடி.

ஸ்ரீ கே. சீனிவாசய்யர், விட்டலபுரம்.

ஸ்ரீ ராமசாமிக் கோனார், விட்டலபுரம்.

ஸ்ரீ பி. எஸ். அனந்தராமய்யர், விட்டலபுரம்

ஸ்ரீ அ. சுடலைமுத்து பிள்ளை, விட்டலபுரம்.




ஹாஸ்டல் வாசலில் நிற்கும் மாணவன் (நண்பனிடம்):—நிஜமாக டிராமா நோட்டீஸ் கொடுக்கிறார்கள் என்று சொல்கிறாய்? நன்றாகத் தெரிந்து கொண்டாயா? ஒரு வேளை, நம்ம இண்டர் பரீட்சைப் பேப்பரா யிருக்கப் போகிறது!

# ஜப்பானியர் கண்ட வழி

ஜெயமணி



ஜப்பானியர் மலாய் நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டு இரண்டு மூன்று தினங்கள் ஆகியிருந்தன. நானும் எனது நண்பரும் கோலாலம்பூரிலுள்ள அவருடைய பங்களாவின் வெளிப்புறத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். திடீரென்று இரண்டு ஜப்பானிய சிப்பாய்கள் பங்களாவுக்குள் வந்தார்கள். தோட்டத்தில் கட்டப்பட்டிருந்த ஒரு கன்றுக் குட்டியைச் சுட்டிக் காட்டி, "எங்களுக்கு அவசரமாகக் கொஞ்சம் பால் வேணும். கறந்து கொடுங்கள்!" என்று கொச்சை ஆங்கிலத்தில் கூறினார்கள்.

"அது கன்றுக்குட்டி. பால் கொடுக்காது" என்றார் நண்பர்.

"அப்படியா? இருந்தாலும் முயற்சி செய்து பாருங்களேன்" என்றனர் அந்தச் சிப்பாய்கள்!

மற்றொரு இடத்தில் ஜப்பானிய ராணுவ அதிகாரியொருவர் வந்து இளநீர் வேண்டும் என்று கேட்டார்.

"மரத்தில் காய்கள் இருக்கின்றன. ஆனால் ஏறிப் பிடுங்குவதற்கு யாரும் இல்லை" என்றனர் அங்கிருந்தோர்.

உடனே அந்த அதிகாரி தம்மிடம் இருந்த வாளினால் சில நிமிஷ நேரத்தில் மரத்தையே வெட்டிக் கீழே சாய்த்து விட்டார்! பிறகு தமக்குத் தேவையான சில இளங் காய்களை எடுத்துக்கொண்டு, மரத்தின் சொந்தக்காரருக்கு ஏதோ தொகை கொடுத்ததுடன், வந்தனமும் அளித்துவிட்டுச் சென்றார்!

* * *

மலாய் நாட்டில் ஜப்பானியரின் ஆட்சி நடந்த காலத்தில் இவற்றைப் போன்ற பல சம்பவங்களை நேரில் காணும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது.

ஜப்பானியரின் உறுதியையும் திறமையையும் முன்னேற்றத்தையும் ஒருகாலத்தில் உலகமே புகழ்ந்தது.

ஆனால், துர்ப்பாக்கிய வசமாக ஜப்பானியர் சீனாவிலும் கிழக்காசியாவைச் சேர்ந்த மற்ற நாடுகளிலும் போர் தொடுத்து அட்டூழியங்கள் புரிந்ததால் அவர்கள் உலக ஜனங்களின் கண்டனத்துக்கும் வெறுப்புக்கும் ஆளாயினர்.

ஜப்பானியரிடம் குறைகள் இருப்பினும் பல நாட்டினரும் போற்றக்கூடிய சிறந்த குணங்களும் இருக்கின்றன. "முடியாத காரியம்" என்பது ஜப்பானியரின் அகராதியிலே இல்லை. "அசாத்தியமான காரியம்" என்று ஜனங்களும் பல சர்க்கார்களும்கூட நினைக்கும் காரியங்களை அவர்கள் வெகு சுலபமாக நிறைவேற்றினர்.

* * *

'உப்பு முதல் கற்பூரம் வரையில்' என்று சொல்லுவார்கள் அல்லவா? அது போல உப்பு முதல் கற்பூரம் வரையில் எல்லா சாதனங்களும் வெளிநாடுகளிலிருந்தே மலாய் நாட்டுக்கு வந்தாக வேண்டும். முக்கியமாக உணவுப் பொருள்களுக்கு மலாய் நாடு பிறநாடுகளின் தயவையே நாடித் தீரவேண்டும்.

மலாயாவில் அநேகமாக தினந்தோறும் மழை பெய்வதால், அது விவசாயத்துக்கு மிகவும் ஏற்ற பூமி என்பதில் சந்தேகமில்லை. ஆனால், டாலர் காய்க்கும் ரப்பர் மரங்களைப் பயிரிடுவதிலேயே பிரிட்டிஷ் சர்க்கார் தங்களுடைய முழு கவனத்தையும் செலுத்தி வந்தனர். எனவே, அங்கு உணவுப் பயிர் விவசாயத்துக்கு இடமில்லாமல் போயிற்று.

ஆனால், யுத்தம் ஏற்பட்டு மலாய் நாட்டுக்குச் சாதனங்கள் வர முடியாமல் நாலாபுறமும் அடைபட்டு விட்டதால், அந்த நாட்டைப் பஞ்சம் எதிர்நோக்கத் தொடங்கியது. மலாயா மக்கள் சிறிதும் தாமதம் செய்யாமல் விவசாயத்தைக் கைக்கொண்டாலன்றி எல்லா ஜனங்களும் பட்டினி கிடக்கும்படி நேரலாம் என்ற நிலைமை ஏற்பட்டது.

உடனே, "உணவுப் பொருள் உற்பத்தியைப் பெருக்குங்கள்" என்ற பிரசாரத்தை ஜப்பானிய சர்க்கார் வெகு தீவிரமாக ஆரம்பித்தனர். வாயளவில் பிரசாரம் செய்வதுடனே, சிற்சில பிரசங்கங்கள் செய்வதுடனோ அவர்கள் திருப்தி யடையவில்லை.

"மண் வெட்டி பிடிக்காதவர்களுக்கு மலாய் நாட்டில் வேலையில்லை" என்று கண்டிப்பாகக் கூறினர். "மண் வெட்டி பிடித்து மரணத்தை விரட்டுங்கள்" என்று ஜனங்களை உற்சாகப்படுத்தினார்கள்.

நீதிபதிகள் உள்பட சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் யாவரையும் வாரத்துக்கு ஒரு நாள் மண்வெட்டி பிடித்து வேலை செய்யும்படி வற்புறுத்தினார்கள். ஜப்பானிய அதிகாரிகள் வீடுவீடாகச் சென்று வீட்டுக் கொல்லைகளிலும் வாசல்களிலும் ஏதாவது பயிர் செய்யவேண்டும் என்று நயமாகவும் பயமாகவும் கூறினார்கள். பிரபுக்களின் பங்களாத் தோட்டங்களில் கறிகாய், கிழங்கு, கேழ்வரகு ஏதாவது பயிரிட்டுத்தான் தீரவேண்டும் என்றார்கள். மேற்படி கட்டளைகளை நிறைவேற்றாதவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்படுவார்கள் என்றும் எச்சரிக்கை செய்தனர்.

விவசாயத்தின் மேன்மையை விளக்கும் ஜப்பானிய சினிமாப் படங்கள் ஜனங்களுக்கு ஏராளமாகக் காட்டப்பட்டன.

ரப்பர் தோட்டங்களிலுள்ள தொழிலாளர்களுக்கு, ரப்பர் மரங்களை வெட்டிவிட்டு அந்த இடத்தில் விவசாயம் செய்ய அனுமதித்தார்கள்.

எந்த இடத்தில் தரிசு நிலம் இருந்தாலும், அதில் யார் வேண்டுமாயினும் பயிரிட்டு அதன் பலனை அனுபவித்துக் கொள்ளலாம் என்று உத்தரவிட்டனர்.

எனவே, ஒரு சில மாதங்களில் மலாயாவில் எங்கு பார்த்தாலும் காய்கறி, கேழ்வரகு, மரவள்ளிக் கிழங்குச் செடிகள் தென்பட்டன. ஆயிரக்கணக்கான ஏக்கர்களில் புதிதாக உணவுப் பயிர் விவசாயம் ஆரம்பமாயிற்று.

அதன் பலனாக ஒன்றிரண்டு வருஷத்தில் மலாயா முழுதும் கேழ்வரகு மூட்டைகளும் மரவள்ளிக் கிழங்குகளும் குவிந்து கிடந்தன. லட்சக்கணக்கான ஜனங்கள் முழுப் பட்டினி கிடக்காமல் காப்பாற்றப்பட்டனர்.

மண்வெட்டி பிடிக்க முதலில் தயங்கியவர்களும் வெட்கப்பட்டவர்களும் பிறகு ஜப்பானியருடைய பிரசாரத்தின் பலனைத் தெரிந்து கொண்டார்கள்.

இவ்வாறாக ஜப்பானியரின் இணையற்ற திறமை காரணமாக மலாய்நாடு நன்றிரண்டு வருஷங்களில் உணவுப் பொருள் சம்பந்தப்பட்ட வரையில் சுயதேவையைப் பூர்த்தி செய்துகொள்ளும் நிலைமைக்கு வரலாயிற்று.

யுத்த காலத்தில் மலாய் நாட்டில் ஏற்பட்டிருந்த நெருக்கடியைப் போல் இந்தியாவில் இச்சமயம் ஏற்பட்டிருக்கிறது. அந்த நெருக்கடியைத் தவிர்க்க ஜப்பானியர் கையாண்ட வழியை இந்திய சர்க்காரும் இந்திய மக்களும் தற்சமயம் கைக்கொள்ள வேண்டும்.

# வட்ட மேஜை

## ★ 'கேள்வி'க் கூத்து!

நிர்வாகத் திறமைக்குப் பெயர்பெற்ற நமது சென்னை சர்வகலாசாலையின் புகழ் கடந்த இரண்டு ஆண்டுகளாக மங்கி வருவது யாவரும் அறிந்ததே. இதன் தொடக்கம் எஸ். எஸ். எல். ஸி. தேர்வுத்தாள்கள் முன்பு வெளியானதின் விளைவு எனலாம். இந்த வருடமும் பி. ஏ. (ஹானர்ஸ்), பி. காம். பி. எஸ். ஸி., முதலிய தேர்வுகளின் கேள்வித் தாள்கள் வெளியானது யாவரும் அறிந்ததே. இத்தோடு நில்லாமல் இண்டர்மீடியட் கேள்வித்தாள்கள் வெளியானதைக் கண்டு திடுக்கிடுகிறோம். பரீட்சைக் கேள்விகள் அன்றன்று இரவு மாணவர்களிடையே தீப்போல் பரவுகிறது. இதிலே ஏமாந்தவர்கள் பாடு திண்டாட்டம்தான். மேலும் இண்டர்மீடியட் ஆங்கில உப பாட கேள்வித்தாள் கேலிக் கூத்திற்குரியது.

மூன்று விதமான கேள்வித்தாள்கள் ஒரே நாளில் மதுரையில் எங்களுக்கு வினியோகிக்கப்பட்டன. மூன்று உபபாடங்கள் எங்களுக்கு உண்டு. ஒரு புஸ்தகம் (Oliver Twist) கட்டாயப் பாடம். ஒரு கேள்வித்தாளில் முதல் பிரிவில் 4ம், இரண்டாம் பிரிவில் 3ம், மற்றொன்றில் முதல் பிரிவில் மூன்றும் இரண்டாம் பிரிவில் மூன்றும் கேட்கப்பட்டிருக்கின்றன. 3-வது வகைக் கேள்வித்தாளில் முதல் பிரிவில் நான்கும், இரண்டாவது பிரிவில் நான்குமாகக் கேட்கப்பட்டிருக்கின்றன. இது பரீட்சையா? அல்லது கேள்விக்கூத்தா?

அணுகுண்டு ரகசியத்தை அம்பலமாக்காமலிருக்க அயல் நாடுகளுக்குத் தெரியும். ஆனால் நம் நாட்டில் கேள்வித்தாள்களைக் காப்பாற்ற முடியாது; வெளியாகாமல் தடுக்கத் தெரியாது. கேள்வித் தாள்கள் அம்பலமாவதும், அச்சுப் பிழை ஏற்படுவதும் எதற்கு அறிகுறி?

மதுரை
26—3—49 ரா. மு. முனியப்பன்

●

## இண்டர் பரீட்சை

'இடுக்கண் வருங்கால் நகுக' என்றார் திருவள்ளுவர். இது எங்களால் எப்படி முடியும்? ஒருமுறை இரவும் பகலும் கண்விழித்துப் படித்துப் பரீட்சை எழுதிய எங்களுக்கு மீண்டும் பரீட்சையா? நான் தற்சமயம் எழுதுவது இண்டர் மறு பரீட்சையைப் பற்றியே! நாங்கள் மறு பரீட்சை எழுதுவதற்கென்றே இம் மண்ணுலகில் ஜனித்தோம் போலும்! எங்கள் எஸ். எஸ். எல். ஸி. தேர்வில்தான் மறு பரீட்சை என்றால் இண்டரிலுமா அது தொடர வேண்டும்? மாணவர்களுக்கு இந்த தண்டனை கொடுப்பது நியாயமா? 'அதிகாரி'கள் எஸ்.எஸ்.எல்.ஸி. மறு பரீட்சையை (1947) முன் எச்சரிக்கையாய்க் கொண்டு கவனமாய் இருக்கக் கூடாதா?

நான் சேலம் கல்லூரி மாணவன். இங்கு ஒருவருக்குக்கூட விஷத்தாள் வெளியாகவில்லை. அவ்விதமிருக்க மீண்டும் பரீட்சை என்றால், இந்தப் பரீட்சை என்னும் 'இடுக்கண்' கண்டு எவ்விதம் நகை புரிய முடியும்? எங்கோ விஷத்தாள் வெளியானால் மாகாண முழுமையும் உள்ள மாணவர்கள் அதற்குத் தண்டனை ஏற்கவேண்டி வருகிறது. இவ்விதம் மாணவர்களாகிய எங்களை வருத்தினால் பரீட்சையை விரும்பும் மாணவனும் அதை வெறுப்பதில் ஆச்சரியம் இல்லை.

தருமபுரி
28—3—49 கே. ஆர். டி. ராஜன்

●

## யார் குற்றம்?

தங்களுடைய 20—3—49 "கல்கி" இதழ் கிடைக்கப் பெற்றது. அதைப் படித்து வரும் பொழுது தங்களால் எழுதப்பட்ட "சரோஜினியின் கலைக்கோயில்" என்ற கட்டுரையில் சரஸ்வதி மகால் கட்டிடத்தில் வைக்கப் பட்டிருக்கும் பிண்ணாக்கு வாசனை ஜமாய்த்துக் கொண்டிருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். அங்கே வருகிற பிண்ணாக்கு மூட்டைகள் திரும்பிப் போவதாகவே தெரியவில்லை என்று குற்றம் சாட்டி இருக்கிறீர்கள். பிண்ணாக்கு வினியோகம் 1948-ம் வருஷம் நவம்பர் முதல் கூட்டுறவு முறையில் சர்க்கார் விதிகளுக்கு உட்பட்டு நடந்து வருகிறது. பிண்ணாக்கு மூட்டைகளை 28—2—49 தேதிக்குள்ளாக மிராசுதார்கள் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று அனவுன்ஸ் செய்து மிராசுதார்களுக்குத் தபால் மூலமாக அறிக்கை அனுப்பி இருந்தும், நாளது தேதி வரை 8,080 மூட்டைகள்தான் 24—2—49ல் இருந்து 19—3—49 வரை எடுத்துப் போயிருக்கிறார்கள். இன்னும் 1,931 மூட்டைகளை மிராசுதார்கள் எடுக்காமலிருக்கிறார்கள். மூட்டைகளை மிராசுதார்கள் எடுக்காதது எங்களுடைய குற்றமா? இந்த மூட்டைகளை மீண்டும் இதர மிராசுதார்களுக்குக் கொடுத்து வருகிறோம். தாங்கள் வேண்டுமானால் இது சம்பந்தப்பட்ட சகல கணக்குகளையும் நேரில் வந்து பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

திருவாரூர். எஸ். ஏ. கோமதிநாயகம்,
21—3—49 காரியதரிசி.

●

## சிக்கனம்

தாங்கள் சென்ற இருவாரங்களில் "கல்கி" இதழ்களில் நமது சரஸ்வதி மஹாலின் அரிய பொக்கிஷங்களைப் பற்றி நம் தமிழ்நாட்டார்

---

★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ 'கேள்விக் கூத்து' என்ற கடிதம் எழுதிய மதுரை ஸ்ரீ ரா. மு. முனியப்ப'னுக்கும், 'நீதி தேவை' என்ற கடிதம் எழுதிய திருவனந்தபுரம் ஸ்ரீ வி. எஸ். மணிக்கும் பங்கிட்டு அளிக்கப்பட்டது.

யாவரும் அறியும்படி எழுதியிருக்கும் கட்டுரைகளுக்காக எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இன்று கிடைத்த இதழில் ஒரு அச்சுப் பிழை புகுந்துள்ளது. நமது சென்னை மாகாண அரசாங்கத்தார் சென்ற வருஷத்திற்குக் கொடுத்த தொகை ரூ. 20,000-த்தைப் பிறகு ரூ. 6,000 மாகக் குறைத்து விட்டதாகக் கண்டிருக்கிறது. இது சரியல்ல. அரசாங்கத்தார் கொடுத்த ரூ. 20,000-த்தில், ரூ. 6,000 சிக்கனம் செய்யும்படி கனம் கல்வி மந்திரியவர்கள் சொல்லியதை யனுசரித்துச் சில செலவு இனங்களைக் குறைத்து ரூ. 6,000 சிக்கனம் செய்வதாகத் தீர்மானிக்கப்பட்டது.

ஆக ரூ. 20,000-த்தில் ரூ. 6,000 குறைக்கப் பட்டது என்று சொல்வதே சரி. ரூ. 6,000 மாகக் குறைக்கப்பட்டது என்று சொல்லியது சரியல்ல.

சே. கோபாலன்

தஞ்சாவூர் (காரியதரிசி, சரஸ்வதி மகால்
27—3—49 நூல் நிலையம்.)

●

## ★ நிதி தேவை

விளக்கெண்ணெய் நடையில் தலையங்களும், வேறு ''அத்தை பாட்டி''க் கதைகளும் எழுதுவதை விட்டுக் கல்கியில் கலை, அழகு, சிற்பம், சித்திரம் என்று எழுதுவதால் என் போன்றவர்களுக்கு ஏற்படும் கஷ்ட நஷ்டங்களைச் சொல்லத்தரமன்று.

தீபாவளி மலரில் அஜந்தா அற்புதங்கள் வெளிவந்தன. அதைப் பார்த்ததும் என் மாப்பிள்ளைக்கு அஜந்தா பித்துப் பிடித்தது; அவுரங்காபாத்துக்குப் போன பிறகுதான் அது விட்டது. எனக்கு ரூபாய் 300 நஷ்டம்.

பிற்பாடு சாந்திநிகேதனக் கட்டுரை வெளியாயிற்று. அதுவும் எனது மாப்பிள்ளையைக் கல்கத்தாவுக்குக் கல்தா கொடுத்தது. ரூபாய் 200 நஷ்டம். இப்போது ''சரபோஜியின் கலைக்கோயில்'' அழைப்பு விடுத்திருக்கிறது. தஞ்சாவூர் கிட்ட இருக்கிறது. பள்ளிக்கூட விடுமுறை. குடும்பம் பூராவும் குழந்தைகள் உள்படக் கிளம்பிவிட்டால் ரயில் சார்ஜுக்கு என்ன செய்வது? பத்திரிகையைப் படித்தது முதல் எனக்கும் கொஞ்சம் சபலம் தட்டியிருக்கிறது! என்னுடைய சிறு பெண் ஓலைச் சுவடியைப் பார்த்ததில்லை. பார்க்கத் தயாராகிக் கொண்டிருக்கிறாள்!

முன்பெல்லாம் சிநேகிதர் வீட்டுக் கல்யாணத்துக்கு 2, 3 ரூபாயில் ரவிக்கைத் துண்டு ஓதியிட்டால் போதும். இப்போது ''சிவகாமியின் சபதம்'' கொடுக்கவேணும். பரிசுப் பதிப்பு ரூ. 15-க்கு நான் என்ன செய்வது?

பண நெருக்கடியைச் சமாளிக்க வேலைநிறுத்தம் செய்து சம்பள உயர்வுக்கு முயற்சிக்கலாமென்றால் ஸ்ட்ரைக் செய்யக்கூடாது என்று சொல்லுகிறீர்கள். ஆகையால் தயவுசெய்து என்போன்றவர்களுக்காகத் தாங்களே ஒரு நிதி வசூலித்து உதவுங்கள்!

திருவனந்தபுரம்
26—3—49 வி. எஸ். மணி.

[இந்த ரசமான கடிதத்துக்கு ரூ. 12-8-0 நிதி கொடுத்து உதவுகிறோம்! ஆசிரியர்]




ஐந்தாம் அத்தியாயம்

## மாயா மோகினி

உலகமாகிற அரங்க மேடையை மறைப்பதற்கு மெல்லிய இருள் திரை விழுந்துகொண்டிருந்தது.

வானத்தின் வடகிழக்கு மூலையில் கரிய மேகங்கள் திரண்டிருந்தன. மேகத் திரளை ஒரு மூலையிலிருந்து இன்னொரு மூலை வரை கிழித்துக் கொண்டு மின்னல் கீற்றுக்கள் ஒரு கணம் ஜொலிப்பதும் மறு கணம் மறைவதுமாயிருந்தன.

வாடைக் காற்று ஜில்லென்று வீசியது. தென்னந்தோப்புகளில் தென்னை மட்டைகள் ஆடி உராய்ந்து மர்மர சத்தத்தை உண்டாக்கின. வயல் வரப்பில் மேய்ந்துவிட்டு வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்த பசு ஒன்று திடீரென்று கன்றை நினைத்துக் கொண்டு "அம்மா!" என்று கத்திற்று. பட்டிக்காட்டுச் சங்கீத வித்வான் ஒருவன்,

**"நாளைக்கு நாளைக்கென்றே தினம் கழியுது!**
**ஞானசபையை எண்ணில் ஆனந்தம்**
**பொழியுது!"**

என்று பாடிக்கொண்டு சென்றான்.

கொஞ்சம் தூரத்திலே இன்னொரு இசைப் புலவன் புல்லாங்குழலில் காட்டக் குறிஞ்சி ராகத்தை வாசிக்க முயற்சி செய்ய, அது புன்னாகவராளியாக உருக்கொள்ளப் பார்த்தது.

சற்றுத் தூரத்திலிருந்த இலுப்ப மரத் தோப்பில் ஒரு இராத்திரிப் பறவை 'கிறீச்' என்று சத்தமிட்டு விட்டுச் சட சட வென்று இறகுகளை அடித்துக் கொண்டு ஒரு மரத்தின் உச்சியிலிருந்து இன்னொரு மரத்தின் உச்சிக்குப் பறந்து சென்றது.

வானவிதானத்தில் விண் மீன்கள் ஒவ்வொன்றாக வெளியே வந்து எட்டிப் பார்க்கத் தொடங்கின.

* * *

சீதாவின் விம்மல் சத்தம் வர வர இலேசாகி மறைந்தது.

"அத்தங்கா! வீட்டுக்குப் போகலாமா?" என்று லலிதா கேட்டாள்.

"லலிதா! எனக்கு வீடு எங்கே இருக்கிறது போவதற்கு?" என்று சொன்னாள் சீதா.

"நான் உயிரோடிருக்கும் வரையில் என்னுடைய வீடு உன்னுடைய வீடுந்தான்!" என்றாள் லலிதா.

"உன்னுடைய நல்ல மனதை நான் அறிவேன், லலிதா! அதனாலேதான் உன்னைத் தேடி வந்தேன். ஆயினும் பெண்ணாகப் பிறந்தவளுக்கு அது போதுமா? எவ்வளவுதான் பிராண சிநேகிதியாயிருந்தாலும் சொந்த வீட்

டில் சுதந்திரமா யிருப்பதுபோல் இன்னொரு வீட்டில் இருக்க முடியுமா?...''

"ஏன் இருக்கமுடியாது? பேஷாய் இருக்கலாம். என்னுடைய தேவபட்டணத்து வீட்டில் எனக்கு எவ்வளவு சுதந்திரம் உண்டோ அவ்வளவு உனக்கும் உண்டு; இன்னும் அதிகமாகக் கூட உண்டு!'' என்றாள் லலிதா.

"உன்னுடைய அன்பு காரணமாக இப்படிச் சொல்கிறாய். நீ சொன்னால் போதுமா? உனக்கு ஒரு எஜமானர் இருக்கிறார் அல்லவா?''

"இருந்தால் என்ன? அவர் வீட்டுக்கு எஜமானர் என்றால் நான் வீட்டுக்கு எஜமானி. அவருக்கு வீட்டில் எவ்வளவு பாத்தியதை உண்டோ அவ்வளவு எனக்கும் உண்டு! என்னுடைய எஜமானரின் நல்ல குணம் உனக்குத் தெரியாது, சீதா! என்னைக் காட்டிலும் அவர் உன்னிடம் அதிக பிரியமாக இருப்பார். அதிலும் நீ நம் தாய் நாட்டின் சுதந்திரத்துக்காகப் பாடுபட்டாய் என்றும் சிறையிலே இருந்தாய் என்றும் அவருக்குத் தெரிந்தது முதல் உன்னைச் சிலாகித்து எத்தனையோ தடவை பேசியிருக்கிறார். நீ எங்கள் வீட்டில் எத்தனை நாள் இருந்தாலும் அவருக்குச் சந்தோஷமாகவே யிருக்கும்!'' என்றாள் லலிதா.

சீதா தான் தாய்நாட்டின் விடுதலைக்காகச் சிறைக்குப் போகவில்லை யென்றும் தன்னை இன்னொருத்தி என்று நினைத்துத் தவறாகச் சிறைக்கு அனுப்பி விட்டார்கள் என்றும் சொல்லிவிட எண்ணினாள்.

"லலிதா! நீங்கள் எல்லாரும் நினைப்பது போல அப்படியொன்றும் நான் தாய் நாட்டுக்குச் சேவை செய்து விடவில்லை...'' என்று சீதா சொல்ல ஆரம்பித்தாள்.

"எல்லாம் எனக்குத் தெரியும்! சூரியா அப்போதே எல்லாவற்றையும் விவரமாக எழுதியிருந்தான். ஒன்றுமே செய்யாதவர்கள் எல்லாம் பிரமாதமாகத் தம்பட்டம் அடித்துக் கொள்கிறார்கள். நீ பிரமாதமான காரியத்தைச் செய்துவிட்டு ஒன்றுமில்லை என்று ஏன் சொல்லிக் கொள்ள வேண்டும்? அடக்கத்துக்கும் ஓர் எல்லை வேண்டாமா?'' என்றாள் லலிதா.

ஓகோ! இவர்கள் எல்லாம் இப்படி நினைப்பதற்குக் காரணம் சூரியாவா? தன்னைப் பெருமைப் படுத்துவதற்காக அவ்விதம் சூரியா எழுதியிருக்கிறான். அதை இப்போது இல்லை யென்று சொல்லிச் சூரியாவைக் காட்டிக் கொடுப்பானேன்? தன்னைப்பற்றிச் சிலர் பெருமையாக நினைத்துக் கொண்டால் நினைத்துக்கொண்டு போகட்டுமே? அப்படி நினைப்பதால் யாருக்கு என்ன நஷ்டம்?

தான் சொல்ல எண்ணியதைச் சீதா மாற்றிக் கொண்டு, "மற்றவர்கள் செய்யாத காரியம் அப்படி என்ன நான் பிரமாதமாகச் செய்துவிட்டேன்? உன் அகத்துக்காரர்கூடத்தான் சிறையில் இரண்டரை வருஷத்துக்கு மேல் இருந்திருக்கிறார்!'' என்றாள்.

"ஆமாம்; அவர் செய்ததை நினைத்தாலும் எனக்குப் பெருமையாகத்தான் இருக்கிறது!'' என்றாள் லலிதா.

சற்றுநேரம் இருவரும் மௌனமாயிருந்தார்கள்.

திடீரென்று லலிதா, "இதுதான் எனக்கு அர்த்தமாகவேயில்லை. உன்னுடைய இல்வாழ்க்கையில் சந்தோஷமில்லை என்று சொல்கிறாயே? கலியாணமான புதிதில் நீ எழுதிய கடிதங்களையெல்லாம் பத்திரமாக வைத்திருக்கிறேன். அந்தக் கடிதங்களை நான் அடிக்கடி எடுத்துப் படிப்பதுண்டு. உன்னுடைய கடிதங்களைப் படிக்கும் போது சுவாரஸ்யமான நாவல்களைப் படிப்பது போல அவ்வளவு சந்தோஷமாயிருக்கும். நீ கோபித்துக் கொள்ளாமலிருந்தால் ஒரு விஷயம் சொல்கிறேன். உன்னுடைய கடிதங்களை இவருக்குக்கூட நான் படித்துப் பார்க்கும்படி கொடுப்பதுண்டு!...''

"ஐயையோ! என்ன வெட்கக்கேடு! இப்படி நீ செய்வாய் என்று தெரிந்திருந்தால் எழுதி யிருக்கவே மாட்டேன்!'' என்றாள் சீதா.

"எதற்காக இவ்வளவு பதட்டப்படுகிறாய்? இப்போது என்ன முழுகிப் போய்விட்டது? உன்னுடைய கடிதங்களைப் படித்து இவர் எவ்வளவோ சந்தோஷப்பட்டிருக்கிறார். இன்னொன்று கூடச் சொல்கிறேன், கேள்! உன்னுடைய கடிதங்களை அவர் படித்ததினால்தான் என்னிடம் அவருடைய அலட்சியம் நீங்கி அன்பாக நடந்து கொள்ளத் தொடங்கினார் என்று எனக்குச் சில சமயம் தோன்றும்.''

"அந்த வரையில் என் கடிதங்கள் உனக்குப் பிரயோஜனமாயிருந்தது பற்றிச் சந்தோஷந்தான்!"

"ஆனால் உன்னுடைய நிலைமை இப்படி ஆகிவிட்டதே என்பதை நினைத்தால் மிகவும் வருத்தமாயிருக்கிறது. அத்தங்கா! அவருக்கு ஏன் அப்படி புத்தி மாறியது? பெண்ணைப் பிறந்தவள் யாரோ ஒருத்தியைப் பற்றிச் சொன்னாயே? அந்தப் பாதகி யார்? அவள் பெயர் என்ன?"

"அவள் பெயர் தாரிணி!"

"தாரிணியா! சூரியா அவளைப் பற்றியும் எழுதியிருக்கிறானே? அவள் ரொம்ப சாமர்த்தியக்காரி, உபகாரி, அப்படி இப்படி என்று. உன்னுடைய உயிரை ஒரு தடவை காப்பாற்றினாள் என்றுகூட எழுதியிருந்தானே!"

"சூரியா உத்தமமான பிள்ளை. அவனுடைய மனது ரொம்ப நல்ல மனது. வெளுத்ததெல்லாம் பால் அவனுக்கு. அதனால் தாரிணியைப் பற்றி 'ஆ! ஹா!' என்கிறான். அவளுடைய உண்மையான குணம் அவனுக்குத் தெரியாது."

"அப்படியானால் அவள் ரொம்பப் பொல்லாதவளா?" என்று லலிதா கேட்டபோது சீதா சிறிது நிதானித்து விட்டுக் கூறினாள்:—

"தாரிணியைப் பொல்லாதவள் என்று நான் எப்படிச் சொல்ல முடியும்? அவள் எவ்வளவோ நல்லவள் தான். என்னை ஏரியில் முழுகிப் போகாமல் அவள் காப்பாற்றியது உண்மைதான். அது மட்டுந்தானா? கொடிய சுரத்தில் வீழ்ந்து யமனோடு நான் போராடிக்கொண்டிருந்த சமயத்தில் அவள்தான் எனக்குச் சிசுரூஷை செய்து காப்பாற்றினாள். அவளைப் பொல்லாதவள் என்று நான் எப்படிச் சொல்வேன்? அவளும் நானும் தனியாக இருக்கும்போது அவளை என் உடன்பிறந்த சகோதரி என்றே எண்ணத் தோன்றும். உன்னைக்காட்டிலுங் கூட அதிகமான அன்பு அவளிடம் எனக்கு உண்டாகும். அவளை விட்டு ஒரு நிமிஷ நேரமும் பிரிந்திருக்க மனம் வராது. வாழும்போது சேர்ந்தாற் போல் வாழ்ந்து சாகிறபோதும் சேர்ந்து சாகவேண்டும் என்று எண்ணிக் கொள்வேன். அந்த மாதிரி அவளிடமே சொல்லியும் இருக்கிறேன். ஆனால் என்னுடைய கணவரின் பக்கத்தில் அவள் நிற்பதைப் பார்த்துவிட்டால் என்னுடைய மனதெல்லாம் மாறிவிடும். அவளிடம் எனக்குள்ள அன்பு விஷமாகிவிடும். அவர் அவளுடைய முகத்தைப் பார்த்தால் போதும்; எனக்கு உடம்பெல்லாம் பற்றி எரியும். அவளும் அவரும் பேசிக் கொள்வதைப் பார்த்தால் எனக்கு வெறி பிடித்துவிடும். ஒன்று அவளையாவது கொன்றுவிட வேண்டும், அல்லது நானாவது செத்துப் போய்விட வேண்டும் என்று தோன்றும்..."

"ஐயோ! அத்தங்கா! எவ்வளவு கொடுமையான வார்த்தைகளைப் பேசுகிறாய்? எனக்கு அம்மாதிரியெல்லாம் மனம் வேறுபடுவதே யில்லை. இவர் யாராவது ஒரு ஸ்திரீயுடன் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தால் எனக்கு அதில் எந்தவிதமான வருத்தமோ கோபமோ உண்டாவதில்லை. உனக்குமட்டும் ஏன் அப்படியெல்லாம் பிசகான எண்ணம் தோன்றவேண்டும்? நீ சொல்வதை யெல்லாம் கேட்டால், பிசகு உன்பேரிலேதான் என்று எனக்குத் தோன்றுகிறது."

"லலிதா! நீ பாக்கியசாலி! என்னைப்போல் நீயும் நரகவேதனை அநுபவிக்க வேண்டும் என்று கனவிலும் நான் எண்ணமாட்டேன். அத்தகைய துர்க்கதிக்கு நீ ஆளாகாதபடி கடவுள் உன்னைக் காப்பாற்றட்டும். ஆனால் பிசகெல்லாம் என்பேரில்தான் என்று எண்ணிக் கொண்டுவிடாதே! இந்த உலகத்தில் சில அதிசயப் பிறவியான ஸ்திரீகள் இருக்கிறார்கள். அவர்களிடம் ஏதோ ஒரு அபூர்வமான சக்தி இருக்கிறது. அப்படிப்பட்ட வசீகர சக்தியுடைய ஸ்திரீகள் தாங்களே கடவுளுக்கும் தர்மத்துக்கும் பயந்து ஒழுங்காக நடந்து கொண்டால்தான் உண்டு. இல்லாவிட்டால் எத்தனையோ குடும்பங்களை அவர்கள் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி விட முடியும். தாரிணியைப் பற்றிச் சூரியா எழுதியிருந்ததாகச் சொன்னாயல்லவா? நீ கோபித்துக் கொள்ளவில்லை யென்று வாக்குறுதி கொடுத்தால் ஒரு விஷயம் சொல்லுகிறேன். சூரியா எவ்வளவோ நல்ல பிள்ளைதானே? ஆனால் அவன்

கூட அந்த மாயா மோகினியின் வசீகரத்தில் மயங்கிப் போனவன் தான்!'' என்றாள் சீதா.

"ஒருவிதத்தில் நீ சொல்லுவது எனக்குச் சந்தோஷமா யிருக்கிறது. அண்ணா சூரியாவுக்கும் வயதாகிவிட்டது அல்லவா? எத்தனை நாளைக்கு இப்படியே பிரம்மசாரியாகத் திரிந்து கொண்டிருப்பான்? சூரியா கலியாணம் செய்து கொள்ளாதபடியினால் சுண்டுவின் கலியாணமும் தடைப்படுகிறது என்று அம்மா ஓயாமல் புலம்பிக் கொண்டிருக்கிறாள். இனிமேல் சூரியா நம்ம பக்கத்துப் பெண்களைக் கலியாணம் செய்துகொள்ளுவான் என்று எனக்குத் தோன்றவில்லை. சூரியாவுக்கும் நீ சொல்கிற அந்தத் தாரிணிக்கும் காதல் என்கிறது உண்மையானால் அவர்கள் இருவரும் கலியாணம் செய்து கொள்ளட்டுமே!'' என்று லலிதா கூறிய வார்த்தைகளில் ஆர்வம் ததும்பிக் கொண்டிருந்தது.

"லலிதா! இராத்திரி யெல்லாம் இராமாயணம் கேட்டுவிட்டுச் சீதைக்கு ராமர் என்ன வேணும் என்பது போலப் பேசுகிறாயே? காதல் என்பதெல்லாம் வெறும் ஏமாற்றம்!...''

இவ்விதம் சீதா சொல்லிக்கொண்டிருக்கும்போதே சற்றுத் தூரத்தில் காலடிச் சத்தம் கேட்டது. வந்தவன் சூரியாதான்.

"இரண்டு பெண்மணிகள் சேர்ந்துவிட்டால் காதலையும் கலியாணத்தையும் தவிர வேறு பேச்சுக் கிடையாது போலிருக்கிறது. அங்கே அப்பா உங்களைக் காணோமே என்று தவித்துக் கொண்டிருக்கிறார். இரண்டு பேரையும் கையோடு கூப்பிட்டுக்கொண்டு வரச் சொன்னார்!'' என்றான் சூரியா.

## ஆறாம் அத்தியாயம்

# நீர்மேற் குமிழி

கிட்டாவய்யர் மெலிந்து மலினமான குரலில், "சீதா! உன்னை ரொம்ப நேரமாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இருட்டி இத்தனை நேரம் வரையிலா குளத்தங்கரையில் உட்கார்ந்திருப்பது? முக்கியமான விஷயம் உன்னிடம் பேசவேண்டும் என்று சொல்லி யிருந்தேனே?'' என்றார்.

"தயவுசெய்து மன்னித்துக் கொள்ளுங்கள், மாமா! இன்னும் கொஞ்ச நாளைக்கு இங்கேதானே இருக்கப் போகிறேன்?'' என்று சீதா சமாதானம் கூறத் தொடங்கினாள்.

"இன்னும் கொஞ்ச நாளைக்கு நீ இங்கேயே இருக்கப்போகிறாய் என்பது சரிதான். ஆனால் நான் இருக்க வேண்டுமே உயிரோடு?'' என்றார்.

"ஐயோ! மாமா! இப்படிப் பேசுகிறீர்களே! இந்தப் பாவியின் அதிர்ஷ்டமா இது? நான் அநாதை; திக்கு இல்லாதவள். நீங்களும் இவ்விதம் என்னிடம் கோபித்துக் கொண்டு பேசுவதா யிருந்தால்............'' என்று கூறிக்கொண்டே சீதா கலகலவென்று கண்ணீரைப் பொழிந்தாள்.

"சீதா! நீ வருத்தப்படாதே! அப்படி நான் சொல்லியிருக்கக் கூடாதுதான். ஏதோ அபஸ்வ்யமாக வாயில் வந்துவிட்டது. போனால் போகட்டும். ஆனாலும் நெருப்பு என்று சொன்னால் வாய் வெந்துவிடுமா, என்ன? சாவைக் குறித்து எதற்காக நாம் பயப்பட வேண்டும்? என்றைக்காவது ஒருநாள் இந்த உலகத்தை விட்டு எல்லாரும் போகவேண்டியதுதானே! 'நீர் மேற் குமிழி' என்று தெரியாமலா பெரியவர்கள் சொல்லி யிருக்கிறார்கள்? 'இன்றைக்கு இருப்பாரை நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ இடமில்லையே!' என்று தாயுமான ஸ்வாமிகள் அருளிச் செய்திருக்கிறார். இன்றைக்குச் செத்தால் நாளைக்கு இரண்டாம் நாள் ஆகிவிடுகிறது. பட்டினத்தடிகள் என்ன சொல்லி யிருக்கிறார்? 'காலன் வருமுன்னே கண்பஞ் சடையுமுன்னே'.........''

"மாமா! மாமா! என் பேரில் ஏதோ உங்களுக்குக் கோபம்போலிருக்கிறது. அதனாலேதான் இப்படிப் பேசுகிறீர்கள். கொஞ்ச நாள் இங்கே இருக்கலாம் என்று நினைத்துக்

கொண்டு வந்தேன். உங்களைத் தவிர என்னிடம் அன்புள்ளவர்கள் இந்த உலகத்திலேயே யாரும் இல்லை என்று எண்ணிக் கொண்டு வந்தேன். நீங்களும் என்னை வெறுப்பதாகவே தெரிகிறது. நாளைக்கே நான் புறப்பட்டு விடுகிறேன், மாமா!"

"சீதா! கொஞ்சம் பொறு! நான் சொல்வதைக் கேட்டுக்கொள்! உன் பேரில் எனக்கு யாதொரு கோபமும் இல்லை; என் பேரிலேதான் கோபம். கொஞ்ச நாளாக நான் படுத்த படுக்கையாயிருக்கிறேன் அல்லவா? படுத்தபடியே யோசித்துக் கொண்டிருக்கிறேன். சில வருஷங்களாக நான் செய்த காரியங்கள் எல்லாம் தப்பு என்று தோன்றிக் கொண்டு வருகிறது. நம் நாட்டுப் பெரியவர்கள் வர்ணாசிரம தர்மம் என்று ஏற்படுத்தியிருக்கிறார்கள். இதில் வர்ணத்தை மாத்திரம் நாம் பிடித்துக் கொண்டிருக்கிறோம். சாதி ஆசாரத்தை அனுஷ்டிப்பதாகச் சொல்கிறோம். அதுவும் எப்படி? நமக்குச் சௌகரியமாயிருக்கும் வரையில்தான்! ஆனால் ஆசிரம தர்மத்தை எத்தனை பேர் அனுஷ்டிக்கிறார்கள்? மனுஷர்களுக்கு ஒரு வயது ஆகிவிட்டால் வானப்பிரஸ்த ஆசிரமத்தை மேற்கொள்ள வேண்டும். எனக்கு அந்த வயது முன்னமே ஆகிவிட்டது. பிள்ளைகள் தலை எடுத்து விட்டார்கள். பேரன் பேத்திகள் பிறந்து விட்டார்கள். இன்னமும் எதற்காக இந்தக் குடும்ப பாரத்தைச் சுமக்க வேண்டும்? அதனுடைய பலன் என்ன? இந்த ஊர்க்காரர்கள் சிலருடைய துர்ப் புத்தியைக் கேட்டுக் குடிபடைகளின் விரோதத்தையெல்லாம் சம்பாதித்துக் கொண்டேன். என்னுடைய பாட்டனார் காலத்திலிருந்து தலைமுறை தலைமுறையாக இந்தக் குடும்பத்துக்கு உழைத்து வந்த குடிபடைகள் இப்போது என்னிடம் வெட்டுப் பழி குத்துப் பழியாகத் துவேஷம் கொண்டிருக்கிறார்கள். எத்தனையோ வருஷமாக அவர்கள் கூரைக் குச்சுப் போட்டுக் கொண்டு குடியிருந்த மனைக்கட்டுகளிலிருந்து அவர்களைத் துரத்தியடித்தேன். கோர்ட்டிலே கேஸ் போட்டு ஜயித்தேன். என்ன உபயோகம்? தலைமுறை தலைமுறையாக நம் குடும்பத்தை வாழ்த்திக் கொண்டிருந்தவர்கள் இன்று சபித்துக் கொண்டிருக்கிறார்கள். கடைசியாக, இந்த ஆபத்து ஒன்று வந்து சேர்ந்தது. நம்முடைய மூதாதைகள் செய்த பூஜாபலத்தினால் இன்றுவரை உயிர் பிழைத்திருக்கிறேன். அங்கேயே என்னைக் கொன்று போட்டுவிடாமல் இந்த மட்டும் உயிரோடு விட்டார்களே! அந்தத் திருடர்கள் நன்றாயிருக்கட்டும்!"

"மாமா! உங்களை அடித்த மகா பாவிகள் நன்றாயிருக்கவா? அவர்கள் நாசமாய்ப் போகவேண்டும். அவர்கள் கை அழுகிப் போகவேண்டும். அவர்கள் நரகத்திலே மிகக் கொடிய நரகத்துக்குப் போகவேண்டும். யாரை வேண்டுமானாலும் நான் மன்னிக்கத் தயார், மாமா! உங்களை அடித்த பாவிகளை மட்டும் மன்னிக்க முடியாது."

"அவர்களை மன்னிப்பதற்கு நீ யார், அம்மா! அல்லது நான்தான் யார்? அவர்களைக் குற்றம் சொல்வதற்குத்தான் நாம் யார்? எய்தவனை விட்டு அம்பை நோவதில் பயன் என்ன? எல்லா உயிர்களிலும் பகவான் குடிகொண்டிருக்கிறார். அடித்தவர்களிடத்திலும் அந்தக் கடவுள்தான் இருக்கிறார்; அடி பட்டவனிடத்திலும் அதே கடவுள்தான் இருக்கிறார். என்னை அடித்தவர்கள் மீது நான் கோபித்துக் கொண்டால் பகவானையே கோபித்துக் கொண்டதாக வல்லவா ஏற்படும்? உண்மையில், பகவான் என்னை அடித்தவர்களின் உருவத்தில் வந்து எனக்கு ஒரு பாடம் புகட்டியிருக்கிறார். 'வயது அறுபது ஆகப் போகிறதே? உனக்கு இன்னும் இந்த ஊரில் என்ன வேலை? போகிற கதிக்கு வழி தேடிக்கொள்ள வேண்டாமா? இனிமேலும் இந்தச் சம்சாரபந்தத்தில் கிடந்து உழலப் போகிறாயா? புத்தி கெட்டவனே!' என்று பகவான் திருடனைப்போல வந்து எனக்கு உபதேசம் செய்திருக்கிறார். சீதா! எனக்கு இனிமேல் இந்த ஊரிலே இருக்கப் பிரியம் இல்லை. நல்லவேளையாக நீ வந்த காரணத்தினால் சூரியாவும் வந்திருக்கிறான். அவனிடம் இந்தக் குடும்பப் பொறுப்பை ஒப்படைத்து விட்டு வெளிக் கிளம்பிவிடப் போகிறேன். காசிக்குச் சென்று கங்கையில்

ஸ்நானம் செய்யவேணும். பிரயாகையில் திரிவேணி சங்கமத்தைத் தரிசிக்க வேணும். அப்புறம் ஹரித்வாரம், ரிஷிகேசம், பத்ரிநாத் முதலிய ஸ்தலங்களுக்குப் போகவேண்டும். கைலாச கிரிக்கே போகவேண்டும் என்று ஆசை இருக்கிறது. கொஞ்ச நாளைக்கு முன்பு ஒரு பெரியவர் 'கைலாச யாத்திரை'யைப் பற்றி எழுதியிருந்த ஒரு புத்தகத்தைப் படித்தேன். அதைப் படித்தது முதல் கைலயங் கிரியே எனக்குத் தியானமா யிருந்து வருகிறது."

"மாமா! நீங்கள் அப்படி யாத்திரை கிளம்புவதா யிருந்தால் என்னுடன் வாருங்கள். நான் அழைத்துக்கொண்டு போகிறேன்!" என்று சீதா மகிழ்ச்சி ததும்பக் கூறினாள். வாழ்நாளைக் கழிப்பதற்கு இது ஒரு ஆனந்தமான மார்க்கம் கிடைத்துவிட்டதே என்று அவளுடைய உள்ளம் குதூகலித்தது.

"ஆகட்டும், சீதா! உன்னோடு அந்தப் புண்ணிய ஸ்தலங்களுக்கெல்லாம் யாத்திரை போகும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமானால், அதைக் காட்டிலும் எனக்குச் சந்தோஷமான காரியம் வேறொன்றும் இராது. அதற்காகத்தான் உன்னிடம் இதையெல்லாம் பற்றிச் சொன்னேன். ஆனால் நீயும் நானும் யாத்திரை கிளம்புவதற்கு முன்னால் உன்னுடைய வாழ்க்கையை நீ செப்பனிட்டுக் கொள்ள வேண்டும்!" என்றார் கிட்டாவய்யர்.

சீதா பதில் ஒன்றும் சொல்லாமல் மௌனமாகத் தலை குனிந்திருந்தாள்.

"நான் எதைப் பற்றிச் சொல்கிறேன் என்பதை நீ தெரிந்து கொண்டாய்; அதனாலேதான் மௌனமாயிருக்கிறாய்: உனக்கும் உன் புருஷனுக்கும் ஒத்துக்கொள்ளவில்லை என்று தெரிந்ததிலிருந்து எனக்கு ஏற்பட்டிருக்கும் மன வேதனையைச் சொல்லி முடியாது. இந்த ஊரிலே உனக்குக் கலியாணம் நிச்சயமாகி நடந்தது. லலிதாவைப் பார்க்க வந்தவன் உன்னைக் கலியாணம் செய்துகொள்வேன் என்று சொன்னான். உன் அம்மாமிக்கு வயிறு எரிந்தது. எத்தனையோ பேர் அசூயைப் பட்டார்கள். ஆனால் நான் பரிபூரணமான சந்தோஷமடைந்து லலிதாவுடன் ஒரே பந்தலில் உனக்குக் கலியாணம் செய்து கொடுத்தேன்.




இப்படிப்பட்ட பாக்கியம் உனக்குக் கிடைத்ததே என்று எல்லா தெய்வங்களுக்கும் நன்றி செலுத்தினேன். அது இப்படி ஆகவேண்டுமா? உன் தாயார் தான் கடைசி வரையில் கஷ்டப்பட்டு வேதனைப்பட்டுச் செத்துப் போனாள். நீயும் அப்படி யிருக்க வேணுமா? ஆசைப்பட்டுக் கலியாணம் செய்து கொண்ட புருஷனுடன் நீ சந்தோஷமாயிருக்கக் கூடாதா? சொல், சீதா!"

"தலைவிதி வேறு விதமாயிருக்கும் போது நாம் என்ன செய்ய முடியும், மாமா? நீங்கள் எவ்வளவோ சந்தோஷத்துடன் கலியாணம் செய்து வைத்தீர்கள். நானும் பிரியப்பட்டுத்தான் கலியாணம் செய்து கொண்டேன். ஆனால் அவருடைய குணம் இப்படி யிருக்கும் என்று யார் கண்டது?"

"அவனுடைய குணத்தைப் பற்றிச் சொல்கிறாய். உன்னுடைய குணம் எப்படி என்று யோசித்துப் பார்த்தாயா? பிறத்தியாரிடம் உள்ள குற்றத்தைக் கண்டுபிடித்துச் சொல்வது



சுலபம். நம்மிடமுள்ள குற்றத்தை உணர்வது கஷ்டம். 'இரண்டு கையையும் கொட்டினுல்தான் சத்தம்' என்று கேட்டதில்லையா? புருஷன் எவ்வளவு தான் குணங் கெட்டவனுயிருந்தாலும் ஸ்திரீ குணமுடையவளா யிருந்தால் கடைசியில் புருஷனும் சீர்திருந்தி விடுவான். சீர்திருந்த முடியும், சீதா! நீ படித்தவள்; நாலும் அறிந்தவள்; நீ தேசத்துக்குச் செய்த சேவையைப் பற்றிச் சூரியா புகழ்ந்து புகழ்ந்து சொன்னுன். அதையெல்லாம் பற்றி எனக்குச் சந்தோஷந்தான். ஆனுல் நான் சொல்லும் ஒரு விஷயத்தைக் கேட்டுக்கொள். இந்தியா தேசம் விடுதலை அடையவேண்டும் என்று நீங்கள் எல்லாரும் பாடுபடுகிறீர்கள். இந்த நாட்டின் முக்கியமான பெருமை என்ன தெரியுமா? உலகத்தில் எத்தனையோ தேசங்கள் சிலகாலம் மிகவும் மேன்மையோடு இருக்கின்றன. பிறகு அடியோடு அழிந்து போகின்றன. ஆனுல் நம்முடைய இந்தியா தேசம் பதினுயிரம் வருஷமாக அழிந்து போகாமலும் மேன்மை குன்றுமலும் இருந்து வருகிறது. மகாத்மா காந்தியைப் போன்ற உத்தம புருஷர்கள் இந்தப் பாரத தேசத்தில் இன்னமும் அவதரிக்கிருர்கள். ஏன் தெரியுமா? இந்த தேசத்துப் பெண்மணிகளின் மகிமையினுல்தான். ஆதிகாலத்திலிருந்து இந்த தேசத்தில் புருஷன் எவ்வளவு மூர்க்கனுயும் குணக்கேடனுயுமிருந்தாலும் அவனேடு ஒத்து வாழ்க்கை நடத்துகிறது என்று ஸ்திரீகள் இருந்து வந்திருக்கிருர்கள். அவர்களுடைய புண்ணியந்தான் இந்தப் பாரத தேசத்தைக் காப்பாற்றி வருகிறது. காந்தி மகாத்மா தம்முடைய தர்ம பத்தினி கஸ்தூரிபாயைப் பற்றி எழுதியிருப்பதை நீ படித்திருப்பாய். மகாத்மா காரணமின்றிக் கஸ்தூரிபாயைக் கடிந்து கொண்டபோது அந்த மாதரசி எவ்வளவு பொறுமையாக நடந்து கணவரே பின்னுல் பச்சாத்தாபப் படும்படியாகச் செய்திருக்

கிருன்? அவ்வளவு தூரம் போக வேண்டாம். உன்னுடைய மாமியையே எடுத்துக் கொள். ஓயாமல் அவள் என்னிடம் சண்டை பிடிக்கிருள் என்பது உண்மைதான். ஆனல் காரியாம்சத்தில் என் விருப்பத்தை மீறி அவள் ஏதாவது செய்வதுண்டா? எத்தனையோ தடவை நான் அவளை ரொம்பக் கோபித்துக் கொண்டிருக்கிறேன். அதற்காக அவள் இந்த வீட்டை விட்டுப் போய் விடுகிறேன் என்று சொன்னதுண்டா?''

"மாமா! கஸ்தூரி பாய் தெய்வாம்சம் பொருந்தியவர். மாமி மிகவும் பாக்கியசாலி; உங்களைப் பதியாகப் பெற்ருர். ஆனல், நானே எல்லாவிதத்திலும் துர்ப்பாக்கியம் செய்தவள். கல்கத்தாவில் அலிப்பூர் ஜெயிலில் நான் இருந்த காலத்தில் ஒரு வருஷம் இவர் கல்கத்தாவில் இருந்திருக்கிருர். நான் சிறையில் இருப்பது அவருக்குத் தெரியும். ஆனல் ஒரு தடவையாவது அவர் என்னை வந்து பார்க்கவில்லை. அப்படியிருந்த போதிலும் சிறையிலிருந்து விடுதலை அடைந்ததும் அவரைப் போய்ப் பார்த்துக் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொள்வது என்று எண்ணியிருந்தேன். ஆனல் என்ன ஆயிற்று? நான் விடுதலையாவதற்கு ஒரு மாதத்திற்கு முன்னுலேதான் அவர் சீமைக்குப் புறப்பட்டுப் போய் விட்டார். கல்கத்தாவில் அவர் நடத்திய வாழ்க்கையைப் பற்றி அறிந்த பிறகு எனக்கு அடியோடு புளித்துப் போய் விட்டது. இனிமேல் அவரோடு சேர்ந்து வாழ்வது இயலாத காரியம் என்று தீர்மானித்து விட்டேன்!''

"அப்படிச் சொல்லாதே, சீதா! கண்ணுல் கண்டதும் பொய், காதால் கேட்டதும் பொய், தீர விசாரித்ததே மெய் என்று ஒரு பழமொழி உண்டு. நீ இல்லாத போது நீ கண்ணுல் பார்க்காத விஷயங்களைப் பற்றி யாரோ சொன்னதை வைத்துக் கொண்டு ஒன்றையும் முடிவு கட்டக் கூடாது. உன் பேரில் ராகவனுக்குக் கோபம் ஏற்படவும் காரணம் இருக்கிறது. சூரியாவுக்கு நீ வீட்டில் இடம் கொடுத்ததினுலும் பிற்பாடு ஜெயிலுக்குப் போனதினுலும் ராகவனுக்கு உத்தியோகம் போய் விட்டது. உத்தியோகம் என்ருல் சாதாரணமான உத்தியோகமா? மாதம் இரண்டாயிரம் ரூபாய் சம்பளம் உள்ள உத்தியோகம். உன்னுடைய காரியத்தினுல் அவ்வளவு பெரிய சர்க்கார் உத்தியோகம் போச்சு என்ருல் புருஷனுக்குக் கோபமாயிராதா?'' என்ருர் கிட்டாவய்யர்.

"அந்த வேலை போனதினுல் ஒன்றும் மோசமில்லை, மாமா! அதைவிடப் பெரிய சம்பளத்துடன் அவருக்குப் பாங்கி வேலை கிடைத்திருக்கிறது.''

"அது எப்படியிருந்தாலும் சரி, ராகவன் சீமையிலிருந்து வந்தவுடன் அவனை நான் பார்க்கப் போகிறேன். நீயும் என்னுடன் வரவேண்டும். உங்கள் இரண்டு பேருக்கும் மத்தியில் உள்ள தடங்கல்களையெல்லாம் போக்கி மறுபடியும் உங்களைக் குடியும் குடித்தனமுமாகப் பார்த்தால்தான் என் மனம் நிம்மதி அடையும். மறு உலகத்தில் உன் தாயாரின் ஆத்மாவும் சாந்தி அடையும். இருக்கட்டும், சீதா! உன் தகப்பனுரைப் பற்றி யாதொரு தகவலும் இல்லையா?'' என்று கிட்டாவய்யர் கேட்டார்.

"மாமா! எனக்கு அப்பாவைப் பற்றி ஒரு சந்தேகம் இருக்கிறது. அது ஒரு ஊகமான சந்தேகந்தான். உங்களிடம் சொல்லக்கூட என் மனம் தயங்குகிறது. நாக்குக் கூசுகிறது.''

"என்னிடம் உனக்கு என்ன கூச்சம், அம்மா! என்ன விஷயமிருந்தாலும் தயக்கமில்லாமல் சொல்லு!''

"அப்பா இஸ்லாம் மதத்தில் சேர்ந்து விட்டதாகஎனக்குச் சந்தேகம்,மாமா!''

"சிவசிவ சிவா! கேட்பதற்கே கர்ணகடூரமாயிருக்கிறதே!— எதனுல் உனக்கு இப்பேர்ப்பட்ட சந்தேகம் உண்டாயிற்று, சீதா?''

"மாமா! நானும் அம்மாவும் பம்பாயில் இருந்தபோது, ஒரு ஸ்திரீ வந்து எனக்காக ரத்தின ஹாரமும் பணமும் கொடுத்துவிட்டுப் போனது ஞாபகம் இருக்கிறதல்லவா? அம்மா உங்களிடம் சொல்லியிருக்கிருளே?''

"ஞாபகம் இருக்கிறது. அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?''

"அந்த ஸ்திரீயை ஒரு சமயம் நான் டில்லியில் பார்த்தேன். அவளுடன் தாடி வளர்த்த சாயபு ஒருவரையும்

கண்டேன். என் மனதில் ஏதோ ஒரு சந்தேகம் உதித்தது. பிறகு நான் டில்லியிலிருந்து கல்கத்தாவுக்குப் போகும் மார்க்கத்தில் ஆக்ராவில் ஒரு பெரிய ஆபத்து எனக்கு வந்தது. ரயிலில் ஒரு பெட்டியை எடுத்ததாகத் திருட்டுக் குற்றம் சாட்டி என்னைக் கோர்ட்டில் கொண்டுபோய் நிறுத்தினார்கள். திக்குத் திசை புரியாமல் நான் திகைத்து நின்ற சமயத்தில் ஒரு சாயபு கோர்ட்டுக்கு வந்து அந்தப் பெட்டியைத் தான் திருடியதாக ஒப்புக்கொண்டார். அதற்காகத் தண்டனையும் அடைந்தார். எனக்காக அப்பேர்ப்பட்ட தியாகத்தைச் செய்தவர் யாராயிருக்கும் என்று கல்கத்தா சிறையில் வசித்தபோது யோசித்து யோசித்துப் பார்த்தேன். ஒருவேளை அப்பாவாக இருக்கலாமென்று தோன்றியது. அப்புறம் யோசிக்க யோசிக்க அவர்தான் என்று உறுதி பெற்றேன்."

"பகவானே! இப்படியும் உண்டா? நீ சொல்லுவது ஏதோ கதைமாதிரி இருக்கிறதே தவிர, உண்மையாகவே தோன்றவில்லை. துரைசாமிக்கு இப்படிப் புத்தி கெட்டுப்போகும் என்று யாரால் நம்ப முடியும்? ஏதோ ஸ்திரீ விஷயமான சபலம் இருந்தாலும், கொஞ்ச நாளைக்கெல்லாம் விட்டுத் தொலைத்துத் தலைமுழுக வேண்டும். அதற்காக மதம் விட்டு மதம் மாறுவார்களா? அதிலும் எப்பேர்ப்பட்ட மதம்? கோயிலை இடிக்கவேண்டும், விக்கிரகத்தை உடைக்க வேண்டும் என்று சொல்லும் மதம்! கடவுளே! துரைசாமியின் பித்ருக்கள் ஏழு தலைமுறைக்கு எள்ளும் தண்ணீரும் இல்லாமல் நரகத்துக்குப் போவார்கள். போனால் போகட்டும், மத சம்பந்தமான விஷயங்களில் உன் புருஷன் எப்படி, அம்மா!"

"அவருக்கு ஹிந்து மதத்தில் ரொம்பப் பற்று உண்டு. வேறு மதங்களைப் பிடிப்பதே யில்லை. அதிலும் முஸ்லிம் மதம் என்றால் அவருக்கு ரொம்பக் கோபம் வரும். சர்க்கார் உத்தியோகம் பார்த்தபோது அவருக்குக் கீழேயிருந்த துருக்க உத்தியோகஸ்தர்களை அவருக்கு மேலே தூக்கிப் போட்டு விட்டார்களாம். அதனால் அந்த மதத்தின் பேரிலேயே அவருக்கு அசாத்தியமான கோபம்" என்றாள் சீதா.

"பிற மதத்தின் பேரில் கோபத்துக்குக் காரணம் அழகாய்த்தா னிருக்கிறது. எப்படியிருந்தாலும் ஹிந்து மதத்தில் பற்று உள்ள வரையில் விசேஷந்தான். அவனை எப்படியாவது நான் திருத்தி விடுகிறேன், பார்! சீதா! கூடிய சீக்கிரம் உன்னுடைய கஷ்டங்கள் எல்லாம் விடிந்துவிடும்" என்றார் கிட்டாவய்யர்.

"மாமா! என்னுடைய கஷ்டங்கள் தீர்ந்து விடும் என்று சொல்கிறீர்கள்? எனக்கு அப்படித் தோன்றவில்லையே! இன்னும் ஏதேதோ பயங்கரமான கஷ்டங்கள் எல்லாம் வரும்போல எனக்குத் தோன்றுகிறது. காரணமில்லாமல் அடிக்கடி மனதில் பீதி உண்டாகிறது. அப்போதெல்லாம் மார்பைப் படபடவென்று அடித்துக் கொள்கிறது. அடிவயிற்றை ஏதோ இழுத்துப் பிடிக்கிறது. இராத்திரியில் நிம்மதியான தூக்கம் கிடையாது, மாமா! பயங்கரமான கனவுகள் காண்கிறேன்!" என்றாள் சீதா. அவளுடைய உடம்பு நடுங்கிற்று. கண்ணீர் பெருகிற்று.

இதுவரை படுத்துக் கொண்டும் சாய்ந்து கொண்டும் பேசிவந்த கிட்டாவய்யர் எழுந்து உட்கார்ந்தார். சீதாவின் தலையைத் தொட்டுக் கொண்டு, "குழந்தாய்! அதெல்லாம் வீண் பிரமை! ஏதோ பழைய கஷ்டங்களை அநுபவித்த ஞாபகத்தினால் உன் மனம் கொஞ்சம் பேதலித்திருக்கிறது. அப்படிப் பீதி உண்டாகும்போதெல்லாம் ராம ராம என்று தாரக நாமத்தைச் சொல்லு. பீதி மறைந்துவிடும். மேலும், நான்தான் உன்னுடன் வரப்போகிறேனே! உனக்கு ஒரு கஷ்டமும் வராமல் நான் பார்த்துக்கொள்கிறேன்!" என்றார் கிட்டாவய்யர்.

இந்தச் சமயத்தில் லலிதா அந்த அறைக்குள்ளே வந்தாள். கிட்டாவய்யர் கடைசியில் கூறிய மொழிகளைக் கேட்டுவிட்டு, "அப்பா! இது என்ன? தேவபட்டணத்துக்கு என்னுடன் வரப் போவதாகச் சொன்னீர்கள். அதை அரை மணியில் மறந்துவிட்டு இப்போது சீதாவுடன் புறப்பட ஆயத்தம் செய்கிறீர்களே! இந்தப் பம்பாய் அத்தங்காளிடம் ஏதோ ஒரு வசீகர சக்தி கட்டாயம் இருக்கிறது" என்று சொன்னாள் லலிதா.



வசீகரமான காக்ஷி



உயர்தரமான நடிப்பு



செவிக்கினிய இசை



குலுங்கவைக்கும் ஹாஸ்யம்

பக்ஷிராஜாவின்

# பவளக்கொடி

மஹாலிங்கம்... ராஜகுமாரி... வரதன்... ஸரோஜினி
கிருஷ்ணன்... மதுரம்... லலிதா... பத்மினி

ஏப்ரல் 9உ வெளிவரும்



டைரக்ஷன்... ஸ்ரீராமுலு நாயுடு... நாராயணன் கம்பெனி வெளியீடு...

# வாஸனின் தாயார்

ரா. கி.

பாரத தேசத்தில் எந்த நாளிலும் தாய்மையைப் போற்றி வந்திருக்கிறார்கள்.

வேத காலத்து முனிவர்கள் "மாத்ரு தேவோ பவா" என்று கூறி அன்னையைத் தெய்வமெனப் போற்றினார்கள்.

தமிழ்நாட்டில் நம் முன்னோர்கள் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்று சொல்லிக் கொண்டாடினார்கள்.

ஓர் அன்னையின் பெருமையைக் கூறுவது தாய்மை எனப்படும் தெய்வீகத்தையே போற்றிப் பாராட்டுவதாகும்.

* * *

"ஆனந்தவிகடன்" ஆசிரியர் ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அவர்களின் தாயார் சென்ற மார்ச்சு மீ 22உ இந்த மண்ணுலக வாழ்வை நீத்து இறைவன் திருவடி நிழலை அடைந்தார்.

ஸ்ரீ வாஸனுடன் நெருங்கிப் பழகியவர்கள் அவர் நெஞ்சில் உறுதி கொண்டவர் என்றும் எதற்கும் கலங்காத உள்ளத்தினர் என்றும் அறிந்திருப்பார்கள்.

சாதாரணமாக ஒரு மனிதருக்கு அதிக பொருள் நஷ்டமோ அல்லது அமித லாபமோ வந்தால் அதை அவருடைய முகத் தோற்றம் பிரதிபலித்துக் காட்டிவிடும்.

ஆனால் ஸ்ரீ வாஸனுக்கு லட்சம் ரூபாய் லாபம் வந்திருந்தாலும் அல்லது லட்சம் ரூபாய் நஷ்டம் வந்திருந்தாலும் அவருடைய முகத் தோற்றத்திலிருந்து அதை யாராலும் கண்டு கொள்ள முடியாது.

அத்தகைய வயிர நெஞ்சம் படைத்த ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் சென்ற வாரத்தில் மனம் கலங்கி முகம் வாடிக் கண்ணும் கண்ணீருமாய்ச் சொல்ல முடியாத உள்ளத் துயரத்தை வெளிக் காட்டும்படி நேரிட்டது.

அன்னையின் பிரிவு ஸ்ரீ வாஸனுக்கு அத்தகைய ஈடுசெய்ய முடியாத பெரு நஷ்டம்.

* * *

ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் தமிழ் நாட்டில் பத்திரிகைத் துறையிலும் ஸினிமாப் படத் துறையிலும் அரிய காரியங்களைச் சாதித்திருக்கிறார். "ஆனந்த விகடன்" பத்திரிகையின் வெற்றி அனைவரும் அறிந்தது. தமிழ்நாட்டில் முதன் முதலாக ஒரு பத்திரிகையை அரை லட்சம் பேருக்கு மேல் வாங்கிப் படிக்கும்படி செய்தவர் அவர். சமீபத்தில் "சந்திரலேகா" படத்தைப் பல அம்சங்களில் தலைசிறந்த படமாக எடுத்துப் புகழ் பெற்றிருக்கிறார். ஹிந்தி "சந்திரலேகா"வின் மூலம் வடநாட்டிலும் வெற்றிக் கொடி நாட்டியிருக்கிறார்.

ஸ்ரீ வாஸனுடைய சொந்த வாழ்க்கையைப் பற்றி அறிந்தவர்கள் அவர் அடைந்துள்ள வெற்றிக்கெல்லாம் முதற் காரணம் அவருடைய தாயார் ஸ்ரீ பாலாம்பாள் அம்மாள் என்பதை அறிவார்கள்.

* * *

உலகத்தில் தாயின் அன்புக்கு இணையானது வேறொன்றுமில்லை. குழந்தைக்காகத் தாய் செய்யக்கூடிய தொண்டும் தியாகமும் ஒப்பற்ற பெருமை வாய்ந்தவை. 'ஒரு தாய்க்கு ஒரே பிள்ளை' என்ற நிலைமையில் தாயின் அன்பு மகத்தான ஒரு சக்தியாகி விடுகிறது. அந்தச் சக்தியினால் சாதிக்க முடியாதது ஒன்றுமில்லை.

ஸ்ரீ எஸ். எஸ். வாஸனுடைய தாயார் இளம் வயதில் கணவரை இழந்தார். அவருடைய அன்பையெல்லாம் உரிமைகொள்ள ஒரு குழந்தைதான் இருந்தது. வேறு செல்வம் ஒன்றுமில்லை. உதவி செய்யும் உறவினரும் இல்லை. வறுமையின் கொடுமைகளுக்கும் சமூகத்தின் கொடூரங்களுக்கும் மத்தியில் அருமைப் புதல்வனை வளர்த்தார்; அரும்பாடுபட்டுப் படிக்கவைத்தார்; தோளில் சுமந்து பல மைல் தூரம் நடந்து சென்று வைத்தியம் செய்வித்தார். இவையெல்லாம் ஸ்ரீ வாஸன் ஒருவரே சொல்ல வேண்டிய புனிதமான அநுபவங்கள். எப்போதாவது ஸ்ரீ வாஸன் தமது இளம்பிராய வரலாற்றை எழுதினால் அது தாய்மையின் அற்புத சக்தியை விளக்கும் உணர்ச்சி நிறைந்த இலக்கியமாகும்.

சில தாய்மார்கள் அன்பு காரணமாகவே புதல்வர்களின் முன்னேற்றத்தைத் தடுத்து விடுவார்கள். "அந்தக் காரியத்தைச் செய்யாதே!" "இந்தக் காரியத்தில் இறங்காதே!" என்று ஓயாமல் புலம்பி, பிள்ளைகள் எந்தக்

காரியத்திலும் துணிந்து இறங்கி முன்னுக்கு வர முடியாமல் செய்து விடுவார்கள்.

ஸ்ரீ பாலாம்பாள் அம்மாள் தமது புதல்வரிடம் அளவற்ற அன்பு கொண்டிருந்ததோடு இணையில்லாத நம்பிக்கையும் வைத்திருந்தார். புதல்வர் அதிசயமான துணிச்சலுடன் தொடங்கும் காரியங்களிலே கூட அவர் குறுக்கே நின்று தடுக்கமாட்டார்.

அன்னையின் போதனைகளையும் யோசனைகளையும் விட அவருடைய அன்பும் ஆசியுமே ஸ்ரீ வாஸனுக்குப் பாதுகாப்புக் கவசமாக இருந்தன. அன்னையின் மனம் கோணக் கூடாது என்ற எண்ணம் அவருக்கு எப்போதும் ஒரு அரணாக இருந்து காத்து வந்தது.

பாரத நாட்டுப் பெண் குலத்தின் அணிகலனை அடக்கம் ஸ்ரீ பாலாம்பாள் அவர்களிடம் பூரணமாகக் குடி கொண்டிருந்தது. புதல்வர் வெற்றியின் சிகரத்தைக் கண்ட சமயத்திலும் அந்த மூதாட்டி சிறிதும் படாடோபத்தை விரும்பாமல் பழைய மாதிரியே சாந்த சுபாவத்துடன் விளங்கினார்.

ஸ்ரீ வாஸனின் தாயார் மூன்று வருஷத்துக்கு முன்னரே கடுமையான நோய்க்கு ஆளானார். புதல்வரின் அன்பும் அவர் இடைவிடாத சிரத்தையுடன் செய்வித்த வைத்திய சிகிச்சையும் பணிவிடையும் அன்னையின் ஆயுளை மூன்று வருஷத்துக்கு மேல் நீடிக்கும்படி செய்தன.

தாம் பெற்று வளர்த்த புதல்வர் மிக உன்னத நிலைக்கு வந்ததைப் பார்த்து மகிழ்ந்து விட்டு ஸ்ரீ பாலாம்பாள் காலஞ் சென்றார். சென்றுள்ள இடத்தில் அவருடைய ஆத்மா சாந்தியும் அமைதியும் அடைந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

ஆனால் அன்னையைப் பிரிந்த புதல்வருக்கு அந்த நஷ்டத்தைச் சமாளித்துக்கொண்டு ஆறுதல் அடைதல் எளிதாயிராது.

கல்கி ஸ்தாபனத்தின் சார்பாக ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அவர்களுக்கும் அவருடைய குடும்பத்தாருக்கும் மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

# ஔவையின் குரல்

எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்பு ஔவை மூதாட்டி தெய்வத் தமிழ் நாட்டில் வாழ்ந்தார்; பயன் செறிந்த மூதுரைகளைப் பகர்ந்தார்; அமுதம் அளாவிய தமிழ்ப் பாடல்களைப் பாடினார். அந்தத் தமிழ் நாட்டுக் குலதெய்வத்தின் குரலை இன்றைய தினம் செய்யுள்களின் மூலமாக அன்றி நேரில் செவிப் புலன் வழியாகவே கேட்கக் கூடுமானால், அது எத்தகைய மகத்தான பாக்கியமாயிருக்கும்?— இவ்வாறு நாம் பல முறை எண்ணமிட்டிருக்கிறோம்; ஏக்கமுற்றிருக்கிறோம்.

ஔவை மூதாட்டியின் குரலை நாம் நேரில் கேட்கக் கொடுத்து வைக்கவில்லை. ஆயினும் அதற்கு அடுத்தபடியான பாக்கியம் நமக்கு இன்று கிடைத்திருக்கிறது. ஔவையார் நம்மிடையே இன்று வாழ்ந்து நாடெங்கும் நடமாடித் தமிழின் பெருமையையும் தமிழ் மக்களின் பண்பாட்டையும் குறித்துப் பேசி வந்தால் நமக்கு எத்தனை பரவசமுண்டாகுமோ ஏறக்குறைய அத்தனை பரவசத்தை ஸ்ரீ டி. கே. ஷண்முகம் ஔவையாராக நடித்தும் பேசியும் பாடியும் நமக்கு அளித்து வருகிறார். இத்தனை நாளும் நாடகத்தின் மூலமாக அளித்து வந்தார்; இப்போது ஒலித் தட்டின் மூலமாகவும் அளித்திருக்கிறார்.

"ஔவையார்" நாடகத்தின் தனிப்பெரும் சிறப்பைக் குறித்துத் தமிழர் பலர் கேட்டும் படித்தும் அறிந்திருப்பார்கள். ஆனால் நாடகத்தைப் பார்த்திருப்பவர்கள் சிலராகத்தான் இருக்கமுடியும். தமிழ் நாட்டில் சில முக்கியமான இடங்களிலேதான் நாடகம் நடந்திருக்கிறது. டிக்கட் வாங்கிப் பார்த்திருப்பவர்கள் சில ஆயிரம் பேருக்குமேல் இருக்க முடியாது.

ஆனால் ஔவை மூதாட்டியின் குரலைத் தமிழ் நாடெங்கும் தமிழர்கள் கேட்பதற்கு இப்போது வசதி ஏற்பட்டிருக்கிறது. ஐந்து கிராமபோன் தட்டுகளில் ஸ்ரீ டி. கே. ஷண்முகமும் அவருடைய சக நடிகர்களும் ஔவையார் நாடகத்தை ஒலிப்பதிவு செய்திருக்கிறார்கள். நாடகத்தின் சுவை கெடாமல் மிக முக்கியமான பகுதிகளை மட்டும் தெரிந்தெடுத்துத் தொகுத்து இந்த ஒலித் தட்டுத் தொகுதியில் ஔவையார் நாடகம் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. அரங்க மேடையில் நாடகத்தைப் பார்க்கும்போது திரையும், காட்சி ஜோடனைகளும், உடைகளும் அடிக்கடி நாம் பார்ப்பது நாடகம் என்பதை நினைவூட்டுகின்றன. ஆனால் ஒலித் தட்டுகளில் கேட்கும்போது ஔவையார் வாழ்ந்திருந்த தமிழகத்தின் பொன் யுகத்துக்கே போய்விடுகிறோம். ஔவை மூதாட்டியின் அறிவு ததும்பிய அன்பளாவிய மதுர மொழிகளைக் கேட்டு ஆனந்த பரவசம் அடைகிறோம்.

தமிழ் நாட்டில் சிலர் இந்தக் காலத்தில் தமிழர் பண்பாட்டுக்கு மிக மாறான காரியங்களைச் செய்கிறார்கள். இழிவான வசை மொழிகளைப் பேசுகிறார்கள்; எழுதுகிறார்கள். துவேஷ விஷத்தைப் பரப்புகிறார்கள். தமிழ் மக்கள் வெட்கித் தலை குனியும்படியான ஆபாச வாசகங்களைச் சுவர்களிலே எழுதித் தமிழ் மொழிக்கும் தமிழகத்துக்கும் இழிவை உண்டாக்குகிறார்கள்.

இத்தகைய காலத்தில் ஔவை மூதாட்டியின் அமுதமொழிகளைத் தமிழ் நாடெங்கும் ஒலிபரப்புதல் மிக உயர்ந்த தொண்டாகும். இந்தத் தொண்டில் ஸ்ரீ டி. கே. ஷண்முகம் சகோதரர்களோடு எச். எம். வி. கம்பெனியாரும் பங்கு கொண்டு ஔவை நாடகத்தை இசைத்தட்டுத் தொகுதியாக வெளியிட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு நம் வாழ்த்துக்கள்.

ஷாலிமார் தயாரிப்புகளை ஆர்டர் செய்யும்போது எந்த வேலைக்காக என்பதை தெரிவிக்கவும்.

# ஒரு அழகிய நவீன சுவர் வர்ணப்பூச்சு



ஷாலிமார் மாட்கோட் நீடித்து உழைக்கவல்ல, அழிக்கக்கூடிய, பூஞ்சக்காளான் படியாத ஓர் எண்ணெய் கலந்த வர்ணப்பூச்சு. தரை, காங்கிரீட், சிமெண்டு, பரத்தின்மேல் பூசலாம். ஷாலிமார் மாட் கோட் 24 அழகிய வர்ணங்களில் கிடைக்கும்.

## அழுத்தமாய் போல் சொல்லுங்கள் ஷாலிமார் மாட் கோட்

சுவர்களுக்கான வர்ணப்பூச்சு

SPX-54-TM

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.**

Post Box 136, Madras 1. Importers & Distributors for Ceylon :
Lewis Brown & Co., Ltd., Post Box 85, Colombo

# கம்பர் தரும் காட்சி

## 247. கேட்கிறதானால் சொல்லுகிறேன்!

டி.கே.சி.

சாம்ராஜ்ய தோரணையிலேயே வளர்ந்தவன் இந்திரஜித்து; எதிரிகள் என்றால் அவனுக்கு ஏளனமாய் என்னத்தானே தோன்றும்?

சந்தம்

தான தன தன்ன தன
தன்ன தன தன் ன

'யானை இலர், தேர்பு ரவி
யாதும் இலர், ஏ வும்
தானை இலர், நின்ற தவம்
ஒன்றும் இலர் தாம்; ஓர்
கூனல் முது கின்சி று
குரங்கு கொடு வெல் வார்
ஆன வரும், மானு டர்! நம்
ஆண்மை இனி(து) அன் றே!'

[ஏவும் தானை இலர்: யானை, தேர் குதிரை ஒன்றும் கிடையாது. தொம்சம் செய்யுங்கள் என்று ஏவுவதற்காகக் காலாட் படைதான் உண்டோ? — கிடையாது; நின்ற தவம் ஒன்றும் இலர்: சக்திக்கான சாதனப் பயிற்சி ஏதேனும் உண்டோ எனின், கிடையாது; இத்தகைய ஆசாமிகள் குரங்கைக் கொண்டு வெல்வார்களாம். அப்படி வெல்வார் ஆனவரும்: ஒன்றுக்கும் உதவாத மனித வர்க்கத்தவர்தான்; அந்த மனிதர் வெல்லுகிறது என்று ஏற்பட்டு விட்டால். அடடா! நம்முடைய வீரமும் அழகான வீரந்தான்!]

* * *

இந்த விதமாகப் பேசி ராவணனது பாதங்களில் விழுந்து "விடை கொடுக்க வேண்டும்" என்று கேட்கிறான் இந்திரஜித்து. அப்போது என்ன நிகழ்கிறது?

என்(று) அடி இறைஞ் சினன்
எழுந்து, 'விடை ஈ மோ
வன்தொ ழிலி னாய்!' எ னவும்;-
வாள்எ யிறு வா யில்த்
நின்ற னன்மு வர்ந்த னன், முன்
தீவி னையை எல் லாம்
வென்ற வன் நினைந்து ணரும்
விட ணன் விளம் பும்.

[என்று அடி இறைஞ்சினன் எழுந்து: என்று பேசிவிட்டு வணங்கினான். — பிறகு எழுந்து; விடை ஈமோ வன்தொழிலினாய்: எனக்கு விடை கொடுப்பாயாக, வீரச் செயலிலேயே நினைப்பவனாகிய ராவணனே; எனவும்: என்று இந்திரஜித்து சொல்லி முடித்த மாத்திரத்தில்:—

இனி விபீஷணனைப் பற்றிய விஷயம்

வாள் எயிறு வாயில் நின்றனன்: பிரகாசமான பல்லை 'நெருநெரு' என்று கடித்தவனாய்; முனிந்தனன்: மன எரிச்சலுக்கு உள்ளானவனாய்; முன் தீவினையை எல்லாம் வென்றவன்: பூர்வ வினையை எல்லாம் ஆன்ம சக்தியால் நீக்கினவனான; நினைந்துணரும் விடணன்: எதையும் ஆழ்ந்து ஆலோசித்து அறிந்தவனுமான விபீஷணன்; விளம்பும்: பேசுகிறான்.]

* * *

இந்திரஜித்து திறமையும் புகழும் கொண்ட வீரன் என்பது தெரியும். ஆனாலும் பொறுப்பை உணராமல் வெறியில் பேசுகிறானே என்று மனம் நைகிறது விபீஷணனுக்கு.

"சிறு பிள்ளைத் தனமாக அல்லவா பேசுகிறாய்!" என்று அதட்டுகிறான்.

சந்தம்

தானனை தானன
தான தன்னை

'பிள்ளைமை விளம்பினை
பேதை நீ' என
ஒள்ளிய புதல்வனை
உரப்பி;— 'என் உரை
எள்ளலை யாம் எனின்,
இயம்பல் ஆற்றுவென்
தெள்ளிய பொருள்' என
அரசற் செப்பினான்.

[பிள்ளைமை விளம்பினை: சிறு பையன் நீ. அதற்குத் தக்கவாறுதான் பேசுகிறாய்; பேதை நீ எனா: ஒன்றும் தெரியாதவனாய் இருக்கிறாய் நீ என்று: ஒள்ளிய புதல்வனை உரப்பி: வீரத்துக்கான புகழ் பெற்ற மகனை அதட்டி, அவன் பேச்சைத் தடுத்து நிறுத்திவிட்டு; என் உரை எள்ளலையாம் எனின்: என் பேச்சை இகழ்கிறது இல்லை என்றிருந்தால்; இயம்பல் ஆற்றுவென் தெள்ளிய பொருள் என: சொல்லி விளக்குகிறேன் தெளிந்த தெளிந்த விஷயத்தைத்தான் என்று: அரசற் செப்பினான்: அரசனான ராவணனுக்குச் சொன்னான் விபீஷணன்.]

விபீஷணனைத் தனியான வேகத்தோடு கொண்டு வருகிறார் கவிஞர்.




மனிதனுக்கு இயற்கை அளித்திருக்கும் சக்திகளில் ஞாபக சக்தியைப்போல் சக்தி வாய்ந்தது வேறு எதுவும் இல்லை. எப்பொழுதோ நடந்த ஒரு சம்பவம் காலப் போக்கில் மறந்து, மறைந்தும் போய்விடுகிறது. ஆனால் இதயத் துடிப்பில் அந்தச் சம்பவத்தின் ஜீவன் என்றும் இயங்கிக் கொண்டிருக்கும். ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில், ஞாபகசக்தியின் வன்மையினால் திடீரென்று அந்தச் சம்பவம் புத்துயிர் பெற்று விடும்.

என் தகப்பனார் நமச்சிவாய வைத்தியர் வைத்தியத் தொழிலில் இணையற்றவராய் விளங்கினார். அந்தத் தொழிலுக்கு முக்கியமாக வேண்டிய கைராசி அவருக்கு இருந்தது. சொஸ்தம் செய்ய முடியாது என்று எத்தனையோ நிபுணர்கள் கைவிட்ட நோய்களையெல்லாம் அவர் சொஸ்தம் செய்திருக்கிறார். பக்கத்துக் கிராமங்களிலிருந்தெல்லாம் இராப்பகல் ஓயாமல் 'கடக், கடக்' என்ற ஓசையுடன் திருக்கழுக்குன்றத்தை நோக்கி வண்டிகள் வந்த வண்ணமாயிருக்கும். அந்தப் பக்கத்து ஜனங்களுக்கு நமச்சிவாய வைத்தியர் என்றால் கண்கண்ட தெய்வம்.

எங்களுக்குப் பூர்விக சொத்து இருந்தது. இந்த வைத்தியத் தொழிலும் எங்களுக்குப் பிதிரார்ஜிதமாக வந்ததுதான். அதற்குச் சான்றாக எங்கள் வீட்டில் தலைமுறை தலைமுறையாகப் பாதுகாக்கப்பட்டு வரும் ஓலைச் சுவடிகள் கட்டுக் கட்டாக இருந்தன. அத்தனையும் வைத்திய சாஸ்திரம். அனேகமாக என் தகப்பனாருக்கு அந்தச் சுவடிகளில் உள்ள பாடல்களெல்லாம் மனப்பாடம்.

என் தகப்பனாரை வைத்தியப் பணிக்கு அடுத்தபடியாக இந்த உலக வாழ்க்கையில் ஈடுபடச் செய்தவன் அடியேன்தான். என் மீது அவர் உயிரையே வைத்திருந்தார். அடுத்தபடியாக அவருடைய இதயத்தில் இடம் பெற்றிருந்தவர் தில்லைநாயகம். தில்லைநாயகமும் என் தகப்பனாரும் இணைபிரியாத நண்பர்கள். காலப்போக்கில் திடீரென்று ஒருநாள் தில்லைநாயகம் காலமானார். அதிலிருந்து என் தகப்பனார் எதிலும் விரக்தி அடைந்துவிட்டார்.

தில்லைநாயகத்தின் உயிரைக் குடிக்க எந்த நோய் வந்திருந்தாலும் என் தகப்பனார் அந்த நோயோடு போராடி அதைப் புறங்கண்டிருப்பார். ஆனால் அவருக்கு வந்த நோய் தேகதத்துவத்தை ஒட்டியதல்ல; மனசைப் பற்றியது. மனமுறிவுக்கு மருந்து எது?

அந்தச் சம்பவத்தை நான் நினைப்பதேயில்லை. அந்தச் சம்பவம் நிகழ்ந்த புதிதில்—சில மாதங்கள் வரையில்—என் மனத்தில்

இனந்தெரியாத ஏக்கம் குடிகொண்டிருந்தது. நாட்களும் வாரங்களும் மாதங்களும் வருஷங்களும் உருண்டு ஓடியபின், அந்த நினைப்பு குடிகொண்டிருந்த இடத்தில் என் மனம் சூன்யமாகி விட்டது.

சதா சர்வகாலமும் என் தகப்பனாருக்குத் தொழில் முறையில் நான் சேவை செய்து வரலானேன். மாத்திரைக்கு மருந்து அரைப்பேன்; லேகியம் தயாரிப்பேன்; கஷாயம் இறக்குவேன்; தைலம் காய்ச்சுவேன். அவரோடுகூட இருந்து எங்கள் வைத்திய சாலைக்குத் தினந்தோறும் வரும் எண்ணிறந்த நோயாளிகளின் கைகளைப் பிடித்துப் பார்ப்பேன். இதில் என் மனம் ஓரளவு திருப்தி யடைந்தது.

★

அன்று எங்கள் வைத்திய சாலைக்குக் காசியிலிருந்து நித்தியானந்தம் என்னும் பிரபு ஒருவர் வந்தார். அவருக்குப் பாரிச வாயு உபத்திரவம். எத்தனையோ விதமான சிகிச்சைகளுக்குப் பிறகு என் தகப்பனாரைத் தேடிக்கொண்டு வந்து சேர்ந்தார். அவருக்கு எங்கள் தோட்டத்திலேயே விடுதி அமைத்துக் கொடுத்தார் என் தகப்பனார். அந்த வீட்டில் நித்தியானந்தமும் அவரது ஏகபுத்திரி தேவகியும்தான் தங்கியிருந்தனர். சமைத்துப்போட ஒரு சமையற்காரனை அவர் தம்முடன் அழைத்து வந்திருந்தார்.

நித்தியானந்தத்தைக் கவனிக்க அப்பாதான் தினமும் காலையில் போய் வந்தார். ஆனால் அப்புறம் நானே அந்த வேலையைச் செய்து வரலானேன்.





முதலில் தேவகி என் கண்ணில் படவே மாட்டாள். தன் தகப்பனாரைக் கவனித்து மருந்து கொடுத்துவிட்டுப் போகும் வரையில் அவள் தூர இருந்து என்னைக் கவனிப்பாள். நான் அவளைக் கவனிக்கிறேன் என்பது தெரிந்தால் அவள் 'சரேல்' என்று மறைந்து விடுவாள்.

மேகவர்ணப் பாவாடையும் மயில் கழுத்துப் போல நீலநிறமுள்ள ஜாக்கெட்டும் வட நாட்டுப் பாணியில் அவள் அணியும் ரோஜா நிறத் தாவணியும் அவளுக்கு அலாதி அழகைத்தான் கொடுத்தன.

கொஞ்ச நாட்களுக்கெல்லாம் நானும் தேவகியும் சகஜமாகப் பேசிப் பழகலானோம். அவள் ஹிந்தியைப் போலவே தமிழும் நன்றாகப் பேசினாள். வட நாட்டுக் குடும்பத்தில் நடக்கும் சுவாரஸ்யமான விஷயங்களையெல்லாம் தேவகி ரஸமாகச் சொல்லும்போது நான் மகுடிக்குக் கட்டுப்படும் பாம்பு மாதிரி கேட்டுக் கொண்டிருப்பேன். ஆயினும் என் மனத்தின் ஒரு மூலையில் விட்டுப் போன ஏதோ ஒரு சம்பவம் தோன்றி, அப்போதெல்லாம் என்னை வாட்டிக் கொண்டிருக்கும்.

என் தகப்பனாரின் இணையற்ற மூலிகை வைத்தியத் திறமையினால் நித்தியானந்தத்தின் உடம்பு குணமாகிக் கொண்டே வந்தது. பாரிசவாயுவினால் பழுதடைந்திருந்த அவருடைய அங்கங்கள் முழுதும் தேறிவிட்டன. அவர் எங்கள் வைத்திய சாலையைச் சுற்றி நடமாட ஆரம்பித்தார். நோய் சொஸ்தமாகி அவர் ஊருக்குப் போய் விட்டால் தேவகியை விட்டு நானும் பிரிய வேண்டுமே என்ற ஏக்கம் என்னைப் பிடித்தது.

★

ஒரு நாள் வழக்கம்போல் தேவகியைப் பார்க்கச் சென்றேன். நித்தியானந்தத்தின்

விடுதியின் பின்புறத்தில் அழகான தோட்டம் இருந்தது. அங்கேதான் நானும் தேவகியும் பேசிக்கொண்டிருப்போம்.

நான் போன சமயம் அவள் அங்கு இல்லை. அங்கிருந்த சிமெண்டு மேடையில் உட்கார்ந்தேன். மேலே வான வீதியில் பாதிமதி வெள்ளிப் படகு மாதிரி மிதந்து கொண்டிருந்தது. வானத்தில் இங்கொன்றும் அங்கொன்றுமாகச் சிதறிக் கிடந்த வெண் முகிற் கூட்டங்கள் படகில் மோதும் அலைகளைப் போல் காட்சியளித்தன.

இந்தக் காட்சியில் ஈடுபட்டுக் கிடந்த என் மனம் ஒன்பது வருஷங்களுக்குப் பின்னால் சென்று விட்டது. நான் சிறு பையனாகி விட்டேன். அப்பொழுது பல வருஷங்களுக்கு முன்பு நான் பாடிக் கொண்டிருந்த பாட்டு என்னையறியாமல் பண்ணுடன் எழுந்தது.

"சோலை மலர் ஒளியோ — உனது
சுந்தரப் புன்னகைதான்?
நீலக் கடல் அலையே — உனது
நெஞ்சின் அலைகளடி!"

இந்தப் பாட்டைக் கேட்டதும் எங்கிருந்தோ ஓடி வந்த தேவகி 'சட்'டென்று நின்று, ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தாள்.



"லாந்தர்க் கம்பத்தின் மேல் ஏன் ஐயா, மோட்டார்க்காரை மோதினீர்? லைசென்ஸைக் காட்டும், பார்ப்போம்!"

"ஓஹோ! லாந்தர்க் கம்பத்தில் மோட்டார்க்காரை மோதுவதற்குக்கூட இப்போது லைசென்ஸ் கொடுக்கிறார்களோ?"

நான் பாட்டை நிறுத்திவிட்டு அவள் அருகில் சென்று, "தேவகி!" என்றேன்.

நான் அழைத்தது அவள் காதில் விழவில்லை.

ஒரு நிமிஷத்துக்குப் பிறகு அவள் ஏதோ கனவு கண்டு விழித்தவள் போல, "அந்தப் பாட்டை இன்னொரு தரம் பாடுங்களேன்!" என்று என்னை வேண்டினாள்.

"ஊஹூம்...நான் பாட மாட்டேன்!" என்று சொல்லி விட்டு, நான் மீண்டும் மேடைக்கு வந்து உட்கார்ந்தேன்.

"ஏன்?" என்று கேட்டுக் கொண்டே அவளும் என் அருகில் வந்து உட்கார்ந்தாள்.

"அந்தப் பாட்டைப் பாடினால் விட்டுப் போன சம்பவம் ஒன்று என் ஞாபகத்துக்கு வருகிறது. அதனால் என் மனம் நிலை கொள்ளாமல் தவிக்கிறது. வேண்டாம், தேவகி!" என்றேன் நான்.

"உங்கள் பாட்டைக் கேட்டதும் எனக்கும் தான் ஒரு விட்டுப்போன சம்பவம் ஞாபகத்துக்கு வருகிறது......" என்று ஆரம்பித்தாள் தேவகி.

"அந்தச் சம்பவம் ஞாபகத்துக்கு வர நீ என் உமாவா, என்ன?" என்று கேட்டு விட்டு, நான் மேலே பேச முடியாமல் கண்களில் நீர் தளும்ப மௌனமாகி விட்டேன்.

அவ்வளவுதான்; அவள் என் கரத்தை அழுத்தமாகப் பற்றி, "சந்துரு!" என்று கத்தினாள்.

நானும், "நீ என் உமாவா?" என்று கத்திவிட்டேன்.

"ஆமாம், சந்துரு! எனக்கு ஏதோ கனவு கண்ட மாதிரி இருக்கிறது. சின்ன வயதில் நீயும் நானும் சேர்ந்து விளையாடுவோம். நான் வருவதற்கு முன்னால் நீ தோட்டத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு இந்தப் பாட்டைப் பாடுவாய். நான் உடனே ஓடி வந்து உன் கைகளைப் பிடித்துக் கொள்ளுவேன். அப்புறம் நானும் நீயுமாகச் சேர்ந்து பல பாட்டுகள் பாடுவோம். ஒரு நாள் சாயங்காலம் நான் தோட்டத்துக்கு வெளியே போய் விட்டேன். அப்பொழுது யாரோ ஒரு முரட்டு மனிதன் கையில் கிளி ஒன்றை வைத்துக் கொண்டு என்னைக் கூப்பிட்டான். கிளியும் தன் அழகான குரலில் 'வா, வா!' என்று என்னை அழைத்தது. நான் எழுந்து அவனோடு போய் விட்டேன். அவன் ஏதேதோ தின்பண்டங்கள் கொடுத்தான். அப்புறம் அவன்

எங்கே என்னை அழைத்துப் போனான் என்றே எனக்குத் தெரியாது......"

"......பிறகு உன் அப்பா உன்னை எங்கெல்லாமோ தேடினார். இந்த ஊரிலும் பக்கத்து ஊர்களிலும் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்தார். ஒன்றும் பலன் இல்லை. 'உமா, உமா!' என்று கதறினார். திருக்கழுக்குன்றத்திலிருந்து அவர் குரலே மீண்டும் எதிரொலித்து அவரை ஏளனம் செய்தது. தாயைச் சிறு வயதிலேயே இழந்த உன்னை உன் தந்தை எவ்வளவு அன்பாக, உயிருக்கு உயிராக நேசித்து வந்தார் என்பது உனக்கு நினைவு இருக்காது. உன்னைக் காணாத வருத்தத்தோடு அவர் அதிக நாள் உயிருடன் இருக்கவில்லை. என் தகப்பனாரும் தம் அருமை நண்பரை இழந்து தாங்கொணா வருத்தத்தில் ஆழ்ந்து விட்டார். நானும் பைத்தியம் பிடித்தமாதிரி ஆகிவிட்டேன். என்பொருட்டே என் தகப்பனார் அந்தச் சம்பவத்தைப் பற்றி நினைவு கூருவதில்லை. இப்படியே நாட்கள் போய்க்கொண்டிருந்தன. கடைசியில் நான் இருக்கும் இடத்தைத் தேடி நீயே வந்துவிட்டாய்!— இதை நினைக்க நினைக்க எனக்கு ஒரே ஆச்சரியமா யிருக்கிறது......!"

"உனக்கு மட்டும்தானா? எனக்கும் ஒரே ஆச்சரியமாய்த்தா னிருக்கிறது......!"

"ஆமாம், நீ எப்படி நித்தியானந்தத்தினிடம் போய்ச் சேர்ந்தாய்?"

"அதெல்லாம் எனக்குத் தெளிவாக ஞாபகம் இல்லை. அன்றைக்கு என்னை அழைத்துச் சென்ற அயோக்கியனிடமிருந்து நித்தியானந்தம் என்னைப் பணம் கொடுத்து வாங்கியிருக்க வேண்டும். அவரே எனக்கு 'தேவகி' என்று பெயர் வைத்து, அன்புடன் அழைத்திருக்க வேண்டும். நான் இருந்தது வடநாடானதால் ஹிந்தி கற்றுக்கொள்ள வேண்டியதும் அவசியமாயிற்று!"

"நீ இங்கு வந்த நாளிலிருந்து என் மனத்தில் உன் உருவம், பேச்சு, சுபாவம் எல்லாம் ஏற்கெனவே எனக்கும் பழகின மாதிரி தோன்றியது. நீ ஹிந்தியிலேயே பேசிவந்த படியினால் எனக்கு உன்னிடம் இதுபற்றிப் பிரஸ்தாபிக்கவே தோன்றவில்லை!"

"எப்படித் தோன்றும்? நம் கதை முழுவதையும் யாராவது கேட்டால் நம்பக் கூட மாட்டார்களே!" என்றாள் அவள்.

"நானும் நீயும் தெரிந்துகொண்ட விஷயத்தைப் பிறர் நம்பவேண்டிய அவசியம் என்ன இருக்கிறது? இதையே ஒரு கதையாக எழுதினால் விழுந்து விழுந்து படித்து ரசிப்பார்கள்!" என்றேன் நான்.




"என்ன அப்பா, இந்தக் காப்பி கெரோஸின் ஆயில் வாசனை அடிக்கிறதே!"
"அப்படியானால் அது டீ ஸார்! எங்கள் காப்பி டர்ப்பென்டைன் வாசனை அடிக்கும்!"

★

இருவரும் சிறிது நேரத்துக்குப் பிறகு நிறைந்த மனத்துடன் பிரிந்தோம். என் தகப்பனார் இந்த விஷயத்தை அறிந்ததும் அடைந்த ஆனந்தத்துக்கு எல்லை யில்லை. நித்தியானந்தமும் இந்த வரலாற்றை யறிந்து ரொம்ப சந்தோஷம் அடைந்தார்.

"நான் இந்தப் பெண்ணை வளர்க்க ஆரம்பித்ததிலிருந்து என்னை ஒரு கவலை ஓயாமல் பிடுங்கித் தின்றது. 'இந்தப் பெண்ணுக்கு ஏற்ற கணவன் வாய்க்க வேண்டுமே! தென்னாட்டில் நமக்கு யாரையும் தெரியாதே! தாய் தந்தையற்ற இந்தப் பெண்ணை யார் அன்புடன் பராமரிக்க ஒப்புக் கொள்ளுகிறார்களோ, அவர்களிடம்தான் இவளை ஒப்புவிக்க வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டிருந்தேன். இப்பொழுது என் குறை நீங்கியது!" என்று கூறி அவர் ஆனந்த பரவசம் அடைந்தார்.

அடுத்த முகூர்த்தத்திலேயே நானும் தேவகியும் தம்பதிகளானோம்.

# பாவம், கறுப்பண்ணன்!

என். என்.

சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன் கறுப்பண்ணன் ஒரு கடையில் வேலை செய்து, ஏதோ நான்கு காசு சம்பாதித்துக் கௌரவமாகக் காலக்ஷேபம் செய்து வந்தான். போதாத காலத்தின் விளைவாக அவன் வேலையும் போயிற்று; அவனுக்குக் கெட்ட சிநேகிதர்களின் சகவாசமும் கிடைத்தது. அவர்களுடன் சேர்ந்து பல மோசடியான விஷயங்களில் பங்கெடுத்துக் கொண்டான். கடைசியில் ஒரு கொள்ளை—கொலை வழக்கில் அவனும் இன்னும் ஆறு ஆசாமிகளும் அகப்பட்டுக் கொண்டனர். ஏழு பேருக்கும் தலா எட்டு வருஷச் சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டது.

கறுப்பண்ணன் சிறைச்சாலைக்குள் நுழைந்து இப்பொழுது கிட்டத்தட்ட இரண்டு வருஷங்களாகிவிட்டன. ஒவ்வொரு நாளும் அவனுக்கு ஒரு யுகமாகத்தான் தோன்றியது. இன்னும் ஆறு வருஷங்கள் இம்மாதிரியே காலங்கழிக்க வேண்டும் என்று எண்ணிப் பார்க்கும்பொழுது, அவன் இருதயமே வெடித்துவிடும்போலிருந்தது.

ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு விநாடியும் அவன் சிறையிலிருந்து எப்படி வெளியேறுவது என்பதைப் பற்றியே யோசித்துக்கொண்டிருந்தான். சிறைச்சாலைக்கு வெளியே பலத்த காவல் இருந்தது அவனுக்குத் தெரியும். சுவரேறிக் குதிப்பதோ அசாத்தியமான காரியம். பதினைந்து அடி உயரம் இருக்கும் சுவரை யாரால் தாண்டிக் குதிக்க முடியும்?



அவன் மனம் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிப்புழுங்கிக் கொண்டிருந்தது. எப்படியாவது சிறையிலிருந்து தப்பியோடி விட்டால், எங்கேயாவது கண்காணாத இடத்திற்குச் சென்று கூலி வேலை செய்தாவது யோக்கியமான பிழைப்புப் பிழைக்க வேண்டும், எவ்விதத் தப்புத் தண்டா வேலைக்கும் போகக் கூடாது என்றெல்லாம் அவன் மனக்கோட்டை கட்டிக் கொண்டிருந்தான்.

அதிர்ஷ்டம் அவன் பக்கம் இருந்ததுபோல் தோன்றியது. அன்றொரு நாள் காலையில் எட்டு மணிக்கு வழக்கம்போல் தன் அறையிலிருந்து தான் வேலை செய்யும் கட்டடத்திற்கு அவன் சென்று கொண்டிருந்தான். வழியில் ஜெயில் வார்டன் அறையில் நடந்த ஒரு சம்பாஷணை அவன் காதில் விழுந்தது.

“மர வேலைகள் நடக்கும் இடத்தில் கடைசி அறையில் தயாராக இருக்கும் மூன்று பெரிய அலமாரிகளும், ஒரு மேஜையும் நாளை மாலை இங்கிருந்து போயாக வேண்டும். லாரி நாளை மத்தியானம் தயாராக இருக்க வேண்டும் என்று சூப்பிரண்ட் துரை சொல்லியிருக்கிறார். லாரியை நீ நாளைக்குக் காலையிலேயே இங்கே கொண்டு வந்து நிறுத்தி விடு!” என்று வார்டன் டிரைவரிடம் சொல்லிக்கொண்டிருந்தான்.

கறுப்பண்ணன் மூளை வெகு வேகமாக வேலை செய்தது. கடந்த மூன்று மாத காலமாக அவன் மர வேலைகள் நடக்கும் இடத்தில் தான் வேலை செய்து வந்தான். வார்டன் குறிப்பிட்ட அறை அவனுக்குத் தெரியும். அங்கே வெகு நாட்களாகப் பல அலமாரிகளும், மேஜை-நாற்காலிகளும், இன்னும் பல மரச் சாமான்களும் குவிந்து கிடந்தன. அடிக்கடி பல சாமான்கள் லாரி

களில் ஏற்றப்பட்டு வெளியே எடுத்துச் செல்லப்படுவதும் அவன் அறிந்த விஷயந்தான். 'மறு நாள் வெளியே போகவிருக்கும் அலமாரிகளில் ஒன்றில் தான் தந்திரமாக உள்ளே ஒளிந்து கொண்டு, அது வெளியே எடுத்துச் செல்லப்படும் பொழுது, அத்துடன் தானும் வெளியே போய்விட்டால்...... நடக்கக் கூடியதுதானா? ...... ஏன் முடியாது? ...... ஆனால் லாரி வெளியே போகும் வரையில் தன்னை ஒருவரும் தேடாமலிருக்க வேண்டும் ... சிறைக்கு வெளியே மாத்திரம் போய்விட்டால் அப்புறம் கவலையில்லை! ...... நமக்கு விடுதலைதான்!'



எல்லாக் காரியங்களும் அவன் மனம் போலவே நடந்தேறின. அவன் உட்கார்ந்திருந்த அலமாரியைத் தூக்கும் பொழுது, "அடேயப்பா! என்ன கனம் கனக்கிறதடா!" என்று ஆட்கள் முணுமுணுத்தது அவன் காதில் விழுந்தது. அதைக் கேட்டதும் கறுப்பண்ணனுக்குப் 'பகீர்' என்றது. 'ஐயோ, ஒரு வேளை கதவைத் திறந்து பார்த்து விடுவார்களோ?' என்று பதறினான். நல்ல வேளை, அந்தமாதிரி யொன்றும் நடக்கவில்லை.

எல்லா அலமாரிகளும் மேஜையும் ஏற்றப்பட்டவுடன், லாரி புறப்பட்டது. கறுப்பண்ணன் 'அப்பாடா!' என்று பெருமூச்சு விட்டான்.

**லா**ரி வேகமாகச் சென்று கொண்டேயிருந்தது. கறுப்பண்ணனுக்குத் தலை சுற்றுவது போல் தோன்றியது. சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் உணர்விழந்து விட்டான்.

அதிர்ச்சியொன்று ஏற்படவே திடுக்கிட்டுக் கண் விழித்தான் கறுப்பண்ணன். அலமாரிகள் அசைவதிலிருந்து அவற்றை லாரியிலிருந்து இறக்கத் தொடங்கி விட்டார்கள் என்பது தெரியவந்தது. அவன் மனத்திலிருந்து ஒரு பெரிய பாரம் நீங்கியது போல் தோன்றியது.

அலமாரிகளை இறக்கி விட்டு, எல்லோரும் போய் விட்டனர். லாரியும் போய் விட்டது. எங்கும் நிசப்தம் குடிகொண்டிருந்தது. 'அப்பாடா!' என்று மீண்டும் பெருமூச்சு விட்டான் கறுப்பண்ணன். தான் அடைபட்டுக் கிடந்த அலமாரியின் கதவுகளைத் திறந்தான். சூரிய வெளிச்சமும் நல்ல காற்றும் அவனை வரவேற்றன. குதூகலத்துடன் அவன் நாலாபுறங்களிலும் பார்த்தான். அவன் கண்ட காட்சி அவனைத் திடுக்கிடச் செய்தது.

அவன் கண்ணுக்கு எதிரில் சுமார் இருபதுகஜ தூரத்தில் இப்படியும் அப்படியுமாகப் போய்க் கொண்டிருந்த சில ஆசாமிகள் அணிந்திருந்த உடையும், அவனைச் சுற்றிலுமிருந்த கருங்கல் கட்டிடங்களும், எல்லாவற்றையும் சுற்றி வளைத்துக் கொண்டிருந்த பிரம்மாண்டமான மதில் சுவரும் அவனுக்குத் தான் எப்பேர்ப்பட்ட இடத்திற்கு வந்திருக்கிறோம் என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டின.

அந்த இடம் வேறு என்னவாயிருக்க முடியும் என்று நினைக்கிறீர்கள்? அதுவும் ஒரு சிறைச்சாலைதான்!

---




மணி:—என்னடா இது? கன்னத்திலே, கையிலே எல்லாம் என்னடா காயம்?

பிட்டு:—கீழே விழுந்துவிட்டேன்டா!

மணி:—நம்ம சேது சொன்னது சரிதான்! நீ பரீட்சைக்கு விழுந்து விழுந்து படிக்கிறாய் என்று சொன்னான்!

# இதய லக்ஷ்மி

எஸ். டி. ஸ்ரீநிவாஸன்

எதிரே கண்ணுக்கெட்டிய தூரம் நீலக் கடல்; சுற்றிலும் மணற் பரப்பு; ரம்மியமான மாலை வேளை. இளம் தம்பதிகள் பலர் உல்லாசமாகக் கரையோரத்தில் நடந்து சென்று கொண்டிருக்கின்றனர். குழந்தைகள் சில மணல் வீடுகள் கட்டி விளையாடுகின்றன; இன்னும் சில கிளிஞ்சல்களைப் பொறுக்குவதில் ஈடுபட்டிருக்கின்றன.

ராகவன் கடலையே உற்றுப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான்.

மறு நிமிஷம் பின்னால் இருந்து அவன் கண்களை யாரோ மூடுவது போன்ற உணர்ச்சி; கைகளை விடுவித்துக்கொண்டு திரும்புகிறான். புன்முறுவல் பூத்த முகத்துடன் பின்னால் நின்று கொண்டிருக்கிறாள் அவள் 'இதய லக்ஷ்மி.........!'

* * *

"அண்ணா! அண்ணா! மணி எழடிக்கப் போகிறதே! இன்னுமா தூக்கம்......?" என்ற குரலைக் கேட்டுக் கண் விழித்தான் ராகவன். அப்போதுதான் தான் கண்டது முற்றும் கனவென்பதை அவன் அறிந்தான்.

ஆனால் அவ்வளவும் கனவாக மாறினால்? அவன் மனம் ஒருகணம் இன்பக் கடலில் மூழ்கியது. மறு கணம் முகத்தில் ஒரு வித சோகக் குறி தென்பட்டது.

கட்டிலருகே சரளா நின்று கொண்டிருந்தாள். எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்து, ஈரம் உலராத கூந்தலை அப்படியே அள்ளி முடிந்து, நெற்றியில் குங்குமப் பொட்டுடன் காட்சி யளித்தாள் அவள்.

"அண்ணா! இன்னும் டிரைவர் வரக் காணோம்! எட்டு மணிக்கெல்லாம் பாட்டு வாத்தியார் வந்து விடுவார். அதற்குள்ளே புற்றுக்குப் பால் தெளித்துவிட்டு வந்துவிட வேண்டும். நீதான் கொஞ்சம் எழுந்து பல் தேய்த்துக் காப்பி குடித்து விட்டுக் காரை ஓட்டிக்கொண்டு வாயேன்.....சீக்கிரம் போய் வந்துவிடலாம்" என்றாள் அவள்.

ராகவன் மௌனமாக எழுந்து சென்றான். ஐந்து நிமிஷத்தில் 'ஷெட்'டிலிருந்த காரை எடுத்து வந்தான். சரளா ஒரு கையில் வெற்றிலைத் தட்டுடனும் மற்றொரு கையில் ஒரு வெள்ளிச் செம்பில் பாலுடனும் பின் 'ஸீட்'டில் ஏறி உட்கார்ந்தாள்.

அவர்கள் பங்களாவில் இருந்து ஒரு மைல் தூரத்தில் இருந்த சிவன் கோவிலை நோக்கிக் கார் கிளம்பியது.

2

நான்கு வருஷங்களுக்கு முன் நடந்த சம்பவம் அது. ராகவன் கலாசாலைப் படிப்பை முடித்ததும் ஒரு 'வனஸ்பதி' கம்பெனியில் உத்தியோகத்தி லமர்ந்தான். பம்பாயில் தங்கள் தொழிற்சாலையை வைத்திருந்த அந்தக் கம்பெனியார் தென்னிந்தியாவிலும் ஒரு கிளைத் தொழிற்சாலை ஏற்படுத்த வேண்டும் என்று விரும்பினர். அதன் பலனாக ராகவனுக்கு ஒரு புது உத்தியோகம் கிடைத்தது. திருச்சி ஜில்லாவில் பல இடங்களைப் பார்வையிட்டு எந்த இடம் தொழிற்சாலைக்குச் சிறந்தது என்று தேர்ந்தெடுக்கும் பொறுப்பு அவன் தலையில் சுமத்தப்பட்டது.

அவனுக்கு வேண்டிய சௌகரியங்களை யெல்லாம் கம்பெனியாரே செய்து கொடுத்தார்கள். அவன் உபயோகத்துக்கென்று பிரத்யேகமாக ஒரு மோட்டார் சைக்கிளும் கொடுக்கப்பட்டது.

ராகவன் பல நாட்கள் பல இடங்களில் சுற்றி அலைந்தான். கடைசியாகத் திருச்சியிலிருந்து கரூர் போகும் ரஸ்தாவில் இருக்கும் சிங்கமேடு என்ற ஊர் தகுதியான இடமாக இருக்கும் என்று யாரோ சொல்லவே, அவன் ஒருநாள் அங்கு போய்ச் சேர்ந்தான்.

காலை பத்து மணிக்கு ஊரை அடைந்த அவன் வெகுநேரம் வரை அதன் சுற்றுப்புறத்தை ஆராய்ந்து கொண்டிருந்தான். பம்பாய்க்கு எழுதி அனுப்பப் பல தகவல்கள் சேகரித்துக் கொண்டான்; பல புகைப் படங்களும் எடுத்துக் கொண்டான்.

அதற்குள் மாலை நேரம் போய் இருட்டிக் கொண்டு வந்தது. அங்கிருந்து திருச்சி இருபது மைல் தூரம். அது மழை காலம். வானத்தில் கார் மேகம் சூழ்ந்து கொண்டிருந்தது. 'உஸ், உஸ்' என்று குளிர்க் காற்று அடித்துக் கொண்டிருந்தது. 'பளிச், பளிச்' என்று மின்னல் கண்களைப்

பறித்தது. சிறிது நேரத்தில் 'பிசு, பிசு' வென்று தூறவும் ஆரம்பித்து விட்டது.

இந்த நிலையில் திருச்சிக்குத் திரும்புவது அசாத்தியமான காரியம் என்று அவனுக்குப் பட்டது. காலை ஒன்பது மணிக்குத் திருச்சியில் சாப்பிட்டுவிட்டு வந்தவன் அவன்; பசி வேறு வயிற்றைக் கிண்டியது.

அப்போது அவ்வூர் குளக்கரையில் நின்று கொண்டிருந்த ராகவன், அந்தப் பக்கமாகத் தோளில் மண்வெட்டியைப் போட்டுக் கொண்டு வீட்டுக்குச் செல்லும் குடியானவன் ஒருவனைக் கண்டான். உடனே கை தட்டி அவனைக் கூப்பிட்டான். அவன் அருகே வந்து, ராகவனையும் அவனுடைய மோட்டார் சைக்கிளையும் ஒருதரம் ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "என்ன வேணும் உங்களுக்கு?" என்று கேட்டான்.

"நான் திருச்சிராப்பள்ளியிலே யிருந்து காலை பத்து மணிக்குப் புறப்பட்டு இங்கு ஒரு வேலையாக வந்தேன். என் வேலை முடிய இவ்வளவு நேரம் ஆகிவிட்டது. இருட்டிப் போய்விட்டதால் இனிமேல் திரும்பித் திருச்சிக்குப் போக முடியாது. மழையில் நனைந்துகொண்டு இங்கே எவ்வளவு நேரம் நிற்பது?—பசி வேறு வயிற்றைக் கிள்ளுகிறது—இங்கே யாராவது கொஞ்சம் சாப்பாடு போட்டு, ராத்திரி படுத்துக் கொள்ள இடம் கொடுப்பார்களா?" என்றான் ராகவன்.

குடியானவன் ஒரு நிமிஷம் யோசித்துவிட்டு, "சரி, என் பின்னோடு வாங்க! எனக்குத் தெரிந்த ஒரு அம்மா இருக்காங்க; அவுங்க வீட்டிலே கொண்டு போய் உங்களை விட்டுவிட்டுப் போகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே நகர்ந்தான்.

மோட்டார் சைக்கிளைத் தள்ளிக்கொண்டு அவனுடன் கிளம்பினான் ராகவன். சில நிமிஷங்களில் அவர்கள் ஒரு தெருவுக்குள் நுழைந்தனர். அங்கு பாழடைந்த வீடுகளும் குட்டிச் சுவர்களும் போக, மீதி மூன்றே வீடுகள் இருந்தன. அவைகளும் விட்டுவிட்டுத் தூரத்தூர இருந்தன. இரண்டு வீடுகளைத் தாண்டிக் கொண்டு மூன்றாவது வீட்டண்டை அவர்கள் வந்தபோது, அக்குடியானவன் நின்று, "இந்த வீடுதான் நான் சொன்னது. கதவைத் தட்டிக் கேட்டுப் பாருங்க!" என்று சொல்லிவிட்டு, மேலே நடந்தான்.

அதற்குள் ராகவனின் தலை நன்றாக நனைந்து விட்டது. சட்டையும் ஈரமாகி விட்டது. அவன் மோட்டார் சைக்கிளை வீட்டின் ஒரு பக்கமாக நிறுத்தி விட்டுக் கதவைத் தட்டினான். அதே சமயத்தில் 'ஜோ' என்று மழை பெய்ய ஆரம்பித்து விட்டது. மழையோசையில் உள்ளேயிருந்தவர்களுக்குக் கதவைத் தட்டிய சத்தம் கேட்கவில்லை. ஆகவே அவன் மறுபடியும் பலமாக ஒரு முறை கதவைத் தட்டினான். "யார்?" என்று ஒரு குரல் கேட்டது; 'டக்' என்று கதவு திறந்தது. கையில் ஒரு 'டெட்ரும்' விளக்குடன் சுமார் பதினாறு வயதுப் பெண் ஒருத்தி வாசற்படியண்டை வந்து நின்றாள்.

அவளைக் கண்ட ராகவனுக்கு ஒரு நிமிஷம் என்ன சொல்வதென்றே தோன்றவில்லை. "நீங்க யாரு? எங்கே வந்தீர்? என்ன வேணும் உங்களுக்கு?" என்ற மதுரமான குரல் அவன் சிந்தனையைக் கலைத்தது.















"வீட்டிலே வேறு யாரும் இல்லையா?" என்று கேட்டான் ராகவன்.

உடனே அந்தப் பெண் விளக்கை ரேழியில் இருந்த திண்ணையில் வைத்துவிட்டு, "அம்மா! யாரோ வந்திருக்கா!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே சென்றாள்.

அடுத்த நிமிஷம் சுமார் நாற்பது வயதுடைய ஒரு ஸ்திரீ அங்கே வந்தாள். ராகவனைக் கண்ட அவள், "யாரப்பா, நீ? என்ன வேணும் உனக்கு? உள்ளே வா, அப்பா! பாவம், மழையிலே நன்னா நனைஞ்சு போய்விட்டாப்போல இருக்கே!" என்று சொன்னதும், ராகவன் தன்னுடைய நிலைமையைச் சொன்னான். அதைக் கேட்ட அந்த அம்மாள் அவனை அன்புடன் வரவேற்று உபசரித்தாள். சாதாரண சாப்பாடேயானாலும் அந்தப் பசி வேளைக்கு ராகவனுக்கு அது தேவாமிர்தமாக இருந்தது. சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போதே அவர்களைப் பற்றிய விஷயங்களை அவன் அறிந்து கொண்டான்.

## 3

இரண்டு வருஷங்களுக்குமுன் அந்த ஸ்திரீயின் கணவர் உத்தியோகத்தின் பொருட்டு வடக்கே எங்கேயோ சென்று விட்டார். இதுவரை அவரைப் பற்றி ஒரு தகவலும் இல்லை. அவர்களுக்கு அந்த ஊரில் குடியிருக்க ஒரு சிறு வீடும், கொஞ்சம் நிலமும் இருந்தன. லக்ஷ்மி— ராகவன் கதவை இடித்தபோது கதவைத் திறந்தவள் — அவளுடைய ஒரே பெண். ஏதோ நிலத்திலிருந்து வந்த வரும்படியை வைத்துக்கொண்டு அவர்கள் அரை வயிறு சாப்பிட்டு வந்தனர்.

இந்த விவரத்தை அந்த அம்மாள் சொல்லக் கேட்ட ராகவனுக்கு, அன்றிரவு வெகு நேரம் வரை தூக்கமே வரவில்லை. அவன் கண்ணை மூடும் ஒவ்வொரு தடவையும் 'பெட்ரூம்' விளக்குடன் வாசற்படி யண்டை வந்து நின்ற லக்ஷ்மியின் உருவம் அவன் அகக்கண்முன் தோன்றிற்று.

பொழுது விடிந்ததும் அவன் அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு திருச்சியை நோக்கிக் கிளம்பினான். மோட்டார் சைக்கிளை 'ஸ்டார்ட்' பண்ணும்போது கதவண்டை வந்து நின்றுகொண்டு, தன்னையே பார்த்துக் கொண்டிருந்த லக்ஷ்மியின் முகத்தை அவன் ஒருமுறை உற்று நோக்

கினான். ஆயினும் தன் மனநிலையை வெளிக் காட்டிக் கொள்ளாமல் அவன் திருச்சிக்குக் கிளம்பிவிட்டான்.

• • •

சில நாட்களுக்கெல்லாம் சிங்க மேட்டிலேயே தொழிற்சாலையை நிறுவவும், ராகவனே அதை அருகில் இருந்து நடத்தவும் கம்பெனியார் உத்தரவு போட்டுவிட்டனர். ராகவன் அவர்களுடைய உத்தரவைச் சந்தோஷமாக ஏற்றுக்கொண்டான். லக்ஷ்மியின் வீட்டிலேயே தங்கி, தொழிற்சாலையின் கட்டிட வேலையைக் கவனித்தான். இதனால் அவர்களுடைய குடும்பத்தில் ஒருவன் மாதிரி அவன் ஆகிவிட்டான்.

ஆனால் சில நாட்களுக்கெல்லாம் எதிர்பாராத விதமாகச் சில சம்பவங்கள் நிகழ்ந்தன. திடீரென்று அந்த 'வனஸ்பதி' கம்பெனியின் முதலாளிகள் தங்களுடைய கம்பெனியை வேறு ஒரு பணக்கார குஜராத்திக்காரனுக்கு விற்றுவிட்டனர். அவன் 'பம்பாயில் உள்ள தொழிற்சாலை ஒன்றே போதும், தெற்கே மற்றொன்று வேண்டாம்' என்று தீர்மானித்து, சிங்கமேட்டில் நடந்து வந்த கட்டிட வேலையை நிறுத்திவிட்டான். அத்துடன், ராகவனை உடனே பம்பாய்க்கு வரும்படியும் தந்தி கொடுத்து விட்டான். லக்ஷ்மியிடமும், அவள் தாயாரிடமும் ராகவன் விடை பெற்றுக்கொண்டு பம்பாய்க்குப் புறப்பட்டான்.

பம்பாய் சென்ற ராகவன் அங்கேயே இரண்டு வருஷங்கள் தங்க நேரிட்டது. அங்கிருந்து ராகவன் ஒன்றிரண்டு தடவை லக்ஷ்மியின் தாயாருக்குக் கடிதம் போட்டான். பிறகு வேலைத் தொந்தரவின் காரணமாக, அவனால் அவர்களுக்குக் கடிதம் எழுத முடியவில்லை.

ஒரு நாள் அவன் ஆபீஸில் வேலை செய்து கொண்டிருந்தபோது, சென்னையில் இருந்த அவன் தகப்பனாருக்கு உடம்பு சரியில்லை என்றும் உடனே புறப்பட்டு வரும்படியும் தந்தி வந்தது. உடனே அவன் ஒரு மாத லீவில் சென்னைக்குக் கிளம்பினான். ஆனால் அவன் வருமுன்பே தந்தை மறைந்துவிட்டார்.

அதன் பின் ராகவன் முதலாளிக்கு எழுதிக் கேட்டுக் கொண்டு, சென்னைக் கிளை ஆபீஸுக்கு மானேஜராகிவிட்டான். நல்ல சம்பளம். ஏற்கெனவே ராகவனின் தகப்பனார் மாம்பலத்தில் ஒரு காரும் பங்களாவும் வாங்கி வைத்திருந்தார். தகப்பனார் இல்லாத













"என் ஸார்! உங்க பையன் எதற்கெடுத்தாலும் வழவழன்னு சதா பேசிக்கொண்டே இருப்பானே, இப்போது என்ன பண்ணுகிறான்?"

"விளக்கெண்ணெய் வியாபாரம் பண்ணிக் கொண்டிருக்கிறான்!"

---

குறை ஒன்றைத் தவிர மற்ற எல்லாச் சௌகரியங்களும் இருந்தன.

சென்னைக்கு வந்து ஐந்தாறு மாதங்கள் கழித்து, அவன் லக்ஷ்மியைப் பார்த்துவிட்டு வரலாமென்று சிங்கமேட்டுக்குச் சென்றான். அங்கே அவன் எதிர்பார்த்தபடி லக்ஷ்மியும் அவள் தாயாரும் இல்லை. அவர்களைப் பற்றி அவன் விசாரித்து அறிந்த விஷயங்கள் அவனைப் பெரிதும் அதிர்ச்சியடையச் செய்தன.

கடன்காரர்கள் லக்ஷ்மியின் வீட்டையும் நிலத்தையும் ஏலம் போட்டு எடுத்துக் கொண்டு விட்டனர் என்றும், ஒரு வருஷத்துக்கு முன்னால் ஊரைவிட்டுச் சென்ற அவளையும் அவள் தாயாரையும் பற்றி வேறு தகவல் ஒன்றும் தங்களுக்குத் தெரியாதென்றும் அந்த ஊரார் சொல்லி விட்டனர்.

இந்தத் தகவலைக் கேட்டதும் அவனுடைய மனக்கோட்டைகள் ஒரு நொடியில் தகர்ந்து சிதைந்து விழுந்தன. இருந்தாலும், அவனுடைய 'இதய லக்ஷ்மி'யை அவனால் மறக்கவே முடியவில்லை.

## 4

ஐந்தாறு நிமிஷத்தில் கார் சிவன் கோவில் வாசலண்டை வந்து நின்றது. சரளா பால் செம்பையும் தட்டையும் எடுத்துக் கொண்டு காரிலிருந்து இறங்கி உள்ளே சென்றாள்.

காரில் உட்கார்ந்திருந்த ராகவனுக்கு மறுபடியும் மறுபடியும் பழைய சம்பவங்களின் ஞாபகமே வந்து கொண்டிருந்தது.

சரளா புற்றுக்குப் பால் தெளித்து விட்டு வெளியே வந்து காரில் ஏறி உட்கார்ந்தாள். ராகவன் காரை 'ஸ்டார்ட்' செய்தான். அப்போது அவனுடைய பார்வை ஒரு கணம் அகஸ்மாத்தாகக் கோவில் வாசற்படியண்டை சென்றது. சரளாவைப் போலவே வேறு யாரோ ஒரு பெண்ணும் புற்றுக்குப் பால் தெளித்து விட்டு வெளியே வருவதை அவன் கண்டான். அந்தப் பெண் லக்ஷ்மியைப் போலவே இருந்தாள். 'இது என்ன?—கனவா, நனவா' என்று அவனுக்குப் புரியவில்லை. ஒரு நிமிஷம் அந்தப் பெண்ணை உற்றுப் பார்த்தான்—ஆம், அவள் லக்ஷ்மியேதான்!

"லக்ஷ்மி!"

அவன் குரலைக் கேட்ட லக்ஷ்மியும் அவள் தாயாரும் சட்டென்று திரும்பிப் பார்த்தனர். எதிர்பாராத விதமாக ராகவனைச் சந்தித்த உணர்ச்சியால் அவர்கள் ஸ்தம்பித்து நின்றுவிட்டனர்.

காரில் உட்கார்ந்திருந்த சரளாவுக்கு அதற்குள் எல்லா விஷயமும் விளங்கி விட்டது. தன் தங்கை சரளாவிடம் ஏற்கெனவே ராகவன் லக்ஷ்மியைப் பற்றித் தெரிவித்திருந்தான். அந்த 'லக்ஷ்மி' அவளாகத்தான் இருக்க வேண்டுமென்பதை சரளா ஊகித்துக் கொண்டாள். அதற்குப் பிறகு கேட்க வேண்டுமா? — சரளா சட்டென்று கீழே இறங்கி லக்ஷ்மியும் அவள் தாயாரும் நின்று கொண்டிருந்த இடத்துக்கு வந்தாள். "வா, லக்ஷ்மி! எங்க அம்மா உன்னைப் பார்க்க வேண்டாமா?" என்றாள் சிரித்துக்கொண்டே.

லக்ஷ்மியையும் அவளுடைய தாயாரையும் காரில் ஏற்றிக்கொண்டு, ராகவன் சரளாவுடன் வீடு திரும்பினான். அவனுடைய மனத்திரையில் அன்று காலை கனவில் கண்ட காட்சி தோன்றியது. அந்தக் கனவு வெகு சீக்கிரத்திலேயே நனவாகவும் மாறியது.




தோட்டக்காரன் :— எஜமான், சோளக் கொல்லைப் பொம்மைக்குப்போட ஒரு பழைய சட்டை வேணும், தாரீங்களா?

எஜமான் (உள்ளே சென்று ஒரு பழைய கோட்டை எடுத்து வந்து) :— இது போதுமாடா?

தோட்டக்காரன் :— என்னுங்க, எஜமான்! நான் காக்கைகளுக்குப் பயம் காட்டுவதற்காக அல்லவா கோட்டு கேட்டேன்! அதுங்க இந்தக் கோட்டைப் பார்த்துச் சிரிப்பாய்ச் சிரிக்கும்போலிருக்குதுங்களே!



அடிக்கடி சினிமா பார்ப்பவர் ஒருவர் வைத்தியத்துக்காகப் பல் டாக்டரிடம் சென்றார்.

டாக்டர் :—உங்களுக்கு எந்தப் பல் ஸார், அதிகத் தொந்தரவு கொடுக்கிறது?

வந்தவர் (ஞாபகமறதியாக) :— அதோ, இடது பக்கத்திலே மூன்றாவது நாற்காலி இருக்கிறதே, அதுதான் ஸார், ரொம்பத் தொந்தரவு கொடுக்கிறது!



ஒரு கம்பெனியில் வேலை செய்பவர்கள் தங்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம் போதாது, அதிகம் வேண்டும் என்று கையெழுத்திட்டு, முதலாளியிடம் மகஜர் எடுத்துப் போனார்கள். அதைப் படித்துப் பார்த்த முதலாளி, "எனக்குந்தான் சம்பளம் போதாது; நான் யாரிடம் போய்க் கேட்பது?" என்றார்.

மகஜர் கொண்டு போனவர் :— அப்படியானால் நீங்களும் இந்த மகஜரில் கையெழுத்துப்போடுங்களேன்!



"ஏன் அப்பா, உனக்குத்தான் ஒரு அனுபவமும் இல்லை என்கிறாய்! ஆனால் சம்பளம் மட்டும் அதிகமாகக் கேட்கிறாயே;"

"வேலை தெரிந்தவனுக்குக் கஷ்டமில்லை; வேலை தெரியாதவனுக்குத்தானே கஷ்டம்? கஷ்டத்துக்குத் தகுந்த கூலி வேண்டாமா?"

ஒருவர் அடிக்கடி மணி என்னவென்று அருகிலிருந்தவரைத் தொந்தரவு செய்து கொண்டிருந்தார்.

கையில் கடிகாரம் கட்டிக்கொண்டிருப்பவர் (கோபமாக) :—என்ன ஐயா, இது! சும்மா தொந்தரவு செய்துகொண்டே இருக்கிறீரே? இப்பொழுது மணி நாலு அடித்து ஐந்து நிமிஷமாகிறது. இனி மேல் சரியாக ஒரு மணி நேரம் கழித்துக் கேட்டால்தான் சொல்லுவேன். இப்பொழுது மணி என்னவென்று சொல்ல முடியாது!



உபாத்தியாயர் :—என்ன மாப்பிள்ளை, இப்போதுதானா வருகிறீர்கள்? காலை வண்டிக்கே வருவதாகக் கடிதம் எழுதியிருந்தீர்களே!

மாப்பிள்ளை :— காலை வண்டியில்தான் வந்தேன். ஆனால் அந்த வண்டி இன்று இரண்டு மணி நேரம் 'லேட்'டாக வந்தது; அதனால்தான் இவ்வளவு நேரம்!

உபாத்தியாயர் (ஞாபக மறதியாக) :—. ஏன் லேட்? ஏறு, பெஞ்சி மேல்!



"எனக்கு ரொம்ப இளகிய நெஞ்சு; யாராவது ஒரு மாட்டை அடித்தாலுங்கூட என் கண்ணில் உடனே ஜலம் வந்துவிடும்!"

"நானும் அப்படித்தான், மாமி! யாராவது அரிவாள்மணையில் வெங்காயம் நறுக்கினால்கூட என் கண்ணில் ஜலம் வந்துவிடும்!"

# விளம்பர மணம்

அசோகியம்

"என்ன, கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லையா?"

"ஆமாம்."

"நிச்சயமாகத்தானா?"

"நிச்சயமாகத்தான்."

"நீதானா சொல்லுகிறாய்?"

"நான்தான் சொல்லுகிறேன்."

"என்னடா, எதிர்த்துப் பேசுகிறாய்? இப்படி எல்லாம் பேசுவதாயிருந்தால் என் கண்முன் நில்லாதே, போ!" என்று தன் மகன் அருணகிரியைக் கடிந்து கொண்டே அறையைவிட்டு வெளியேறினார் ரத்னவேலு.

தந்தை வெளியே சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் தாயார் உள்ளே நுழைந்தாள். "என்டா அருணகிரி உனக்குப் பைத்தியம் கியித்தியம் பிடித்துவிட்டதா, என்ன? அப்பா நல்லதுக்குத் தானே சொல்கிறார்! அவரைக் கோபமூட்டுவது நமக்கு அழகா? அவரிடம் போய் 'எனக்குச் சம்மதம்' என்று சொல்லு. இல்லாவிட்டால் நானே போய்ச் சொல்லட்டுமா?" என்று கேட்டாள்.

அருணகிரிக்கு ஆத்திரம் தாங்கவில்லை. "அம்மா, எத்தனை தடவைதான் சொல்லுவது? என் கோபத்தைக் கிளறாதே. நீ என்ன சொன்னாலும் நான் கேட்கப் போவதில்லை" என்று எரிந்து விழுந்தான்.

"கல்யாணம் செய்து கொண்டால் என்ன?"

"அது என் இஷ்டம். அதைப்பற்றிக் கேட்பதற்கு நீ யார்?"

"ஆமாம். உன்னைக் கேட்பதற்கு நான் யார்? உன்னைப் பிள்ளையாகப் பெற்றெடுத்த எனக்கு அதைக் கேட்கக்கூட உரிமை இல்லையாதுதான். நான் வந்த வழி அப்படி!" என்று தாயார் அங்கலாய்க்கத் தொடங்கினாள்.

அருணகிரி எதையோ நினைத்து மனதுக்குள் லேசாகச் சிரித்துக் கொண்டான். "சரி, உங்கள் இஷ்டப்படியே கல்யாணம் செய்து கொள்ளுகிறேன். ஆனால் நீங்கள் என்னுடைய இரண்டே இரண்டு நிபந்தனைகளை நிறைவேற்றியாக வேண்டும். ஒன்று பெண்ணுக்குப் பதினெட்டு வயதுக்குக் குறைந்திருக்கக் கூடாது. இன்னொன்று அவள் குறைந்தது 'இண்டர் மீடியட்'டாவது படித்திருக்க வேண்டும்" என்றான்.

"இதற்குத்தானா இவ்வளவு நாள் அலைக்கழித்தாய்? முன்பே சொல்லியிருக்கக் கூடாதோ? சரி, உன் இஷ்டப்படியே பெண் பார்க்கச் சொல்லுகிறேன். இந்தக் காலத்தில் படித்த பெண்களுக்கு என்ன குறைச்சல்?" என்று சொல்லிக்கொண்டே தாயார் தன் கணவரைக் காணச் சென்றாள். அவளுக்குப் பெரிய இக்கட்டிலிருந்து தப்பியது போன்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. இந்தத் தொணதொணப்பிலிருந்து விடுதலை கிடைத்ததில் அருணகிரிக்கும் சொல்லமுடியாத மகிழ்ச்சி. 'நம் ஜாதியிலாவது, இவ்வளவு படித்த பெண் கிடைப்பதாவது? நடக்கவே நடக்காத காரியம்' என்று முணுமுணுத்தவாறு நிம்மதியான நீண்ட மூச்சு விட்டான்.

ரத்னவேலு உடையாருக்குத் தம் மகன் கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லை என்று செய்திருந்த பீஷ்மப் பிரதிக்ஞை தளர்ந்திருப்பதில் பரம திருப்தி. மறுநாளே பல பத்திரிகைகளில் 'மணமகள் தேவை' என்ற விளம்பரம் கொடுத்துவிட்டார்

விஷயம் அறிந்த அருணகிரியின் நண்பர்கள் அவனைக் கண்டபடி 'கோட்டா' பண்ணலாயினர். வெறும் வாயை மெல்லுபவர்களுக்கு அவல் கிடைத்துவிட்டால் கேட்க வேண்டுமா?

நண்பர்களின் கேலி காரணமாக அவன் தெருவில் தலை நீட்ட முடியவில்லை.

நண்பர்களின் கேலி போதாதென்று நாலு நாட்களுக்கெல்லாம் அவனுக்கு வேறொரு தலைவேதனையும் ஏற்பட்டது. அவன் தகப்பனார் பெயருக்குக் கடிதங்கள் வந்து குவியத் தொடங்கின. 'என் பெண் பள்ளியில் படித்துக் கொண்டிருக்கிறாள். என் பெண் மெட்ரிகுலேஷன் பாஸ் செய்திருக்கிறாள். என் பெண்ணுக்கு டியூஷன் சொல்லி வைத்துக் கொண்டிருக்கிறேன். என் பெண்ணுக்கு ஸ்ரீதனமாகச் சொத்து எழுதி வைக்கிறேன். மாப்பிள்ளையை மேல்

படிப்புக்கு மெல்காடு அனுப்பி வைக்கச் சித்தமாயிருக்கிறேன்' என்பது போன்று எத்தனையோ கடிதங்கள்!

"அருணகிரி, இத்தனை பெண்கள் இருக்கிறார்களே! ஒரு பெண் கூடவா உனக்குப் பிடிக்கவில்லை? இதோ பார், ஒரு பெண்ணுடைய போட்டோகூட வந்திருக்கிறது. பார்ப்பதற்கு நன்றாயிருக்கிறாள். இங்கிலீஷ் தெரியுமாம். ஹிந்தியும் படித்திருக்கிறாளாம். நன்றாகப் பாடவும் வருமாம். பூ வேலை, தையல் வேலை எல்லாம் கூடக் கற்றுக் கொண்டிருக்கிறாளாம். என்ன சொல்கிறாய்?" என்று கேட்டாள் தாயார்.

இம்மாதிரி தினந்தோறும் நடக்க ஆரம்பித்து விடவே அருணகிரி அரண்டு போய்விட்டான். 'இதேதடா இது? வழியோடு போகிற சனியனை விலைக்கு வாங்கிக்கொண்ட கதையாகி விட்டதே!' என்று தோன்றியது அவனுக்கு. அதிலிருந்து விடுபட அன்று இரவு முழுவதும் யோசித்தான், யோசித்தான்; அப்படி யோசித்தான். கடைசியில் ஒரு வழி தோன்றிற்று.




அதன்படி அப்பாவிடம் அநுமதி பெற்று மதுரையிலிருக்கும் மாமா வீட்டுக்கு மறுநாளே புறப்பட்டான்.

**மா**மா வீட்டுக்குப் போய் ஒருவாரம் கூட ஆகியிராது. அருணகிரியை உடனே புறப்பட்டு வரும்படி அவன் தந்தையிடமிருந்து ஒரு தந்தி வந்தது. எதிர்பாராத இந்தத் தகவலைக் கேட்டதும் அவனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. அத்துடன் கவலையும் அவனைச் சூழ்ந்து கொண்டது. தந்தியின் உண்மையான அர்த்தம் அவனுக்கு விளங்கவில்லை. ஏதாவது துர்ச்சம்பவம் நடந்திருக்குமோ? அல்லது அவனுடைய கல்யாண விஷயமாகத்தானிருக்குமா! எப்படியிருந்தாலும் போக வேண்டியதுதான் என்று தீர்மானித்து ரயில்வே ஸ்டேஷனுக்குக் கிளம்பினான்.

ரயில் வந்ததும் அருணகிரி கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தான். நுழைந்ததும் நுழையாததுமாக அவனுடைய பார்வை ஒரு யுவதியின்மீது விழுந்தது. அவளுக்கு எதிரில் உள்ள பெஞ்சியில் ஒரு வாலிபன் படுத்திருந்தான். அந்த வண்டியில் அவர்களிருவரைத் தவிர வேறு யாரும் இல்லை.

வாலிபன் பத்திரிகை படிப்பதில் ஈடுபட்டிருந்தான். பெண் புத்தகம் படித்துக்கொண்டிருந்தாள். அருணகிரி ஒரு பெஞ்சியில் தன் படுக்கையை விரித்தான். அந்த பெஞ்சி கடியில் தன் பெட்டியை வைத்தான். பிற சௌகரியமாக உட்கார்ந்துகொண்டு, ஜ னல் வழியே தலை நீட்டிப் பிளாட்பாரத்தை பார்க்கலானான். அச்சமயம் அவ்வழியே ஒ பழக் கடைக்காரன் வரவே, அருணகி அவனிடமிருந்து இரண்டு ஆப்பிள் பழங்கள் வாங்கிக் கொண்டான். அதற்குள் வண்டி நகர்ந்தது. ஸ்டேஷனின் காட்சிகள் ஒ வொன்றாகப் பார்வையிலிருந்து மறைய வாயின. அருணகிரி ஜன்னலுக்கு வெளியே நீட்டியிருந்த தலையை உள் பக்கம் இழுத்துக் கொண்டான். அப்பொழுதும் பெண் புத் கத்திலேயே லயித்திருந்தாள். பத்திரிகை படித்துக்கொண்டிருந்த வாலிபனும் ஒன்றும் பேசக் கொடுக்கவில்லை. அருணகிரி பேனாக் கத்தியை எடுத்து ஆப்பிள் பழத் தைச் சீவத் தொடங்கினான்.

படித்துக் கொண்டிருந்த வாலிபன், பத்தி ரிகையை மடித்துப் பக்கத்தில் வைத்து விட்டுச் சோம்பல் முறித்தவாறு, "அமிர்தம், என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான்.

"தெரியவில்லையா? நீ வாங்கித் தந் நாவலைப் படித்துக்கொண்டிருக்கிறேன்!"

அந்தக் குரலினிமையைக் கேட்ட அருண கிரிக்கு அப்புறம் ஆப்பிள் பழம் தின்ன



நடவில்லை. அந்தப் பெண்ணின் குரலினிமை வீணையின் நாதத்தைத் தோற்கடிக்கக் கூடியதாயிருந்தது. அவன் ஒரு முறை நிமிர்ந்து அவளைப் பார்த்தான். அடுத்த கணமே வெட்கத்தினால் தலையைக் குனிந்து கொண்டான். அந்தப் பெண் புத்தகம் படிப்பதை நிறுத்திவிட்டுத் தன் தமையனைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய எழிலுருவம் கண்கள் வழியே அருணகிரியின் உள்ளத்தில் உடனே புகுந்து கொண்டுவிட்டது. ஆகா! என்ன அழகு! என்ன அழகு! அருணகிரிக்கு அவளையே பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமென்ற ஆசை! ஆனால் அச்சம் அவனை அவ்விதம் செய்யவிடவில்லை.

சிறிது நேரத்துக்கெல்லாம் அடுத்த ஸ்டேஷன் வந்தது. வாலிபன் வாழைப் பழக்காரனைக் கூப்பிட்டு வாழைப்பழங்கள் விலைக்கு வாங்கினான். இரண்டு பழங்களை எடுத்துத் தன் தங்கையிடம் கொடுத்தான். இன்னும் இரண்டைப் பிய்த்து அருணகிரியிடம் நீட்டி, "இந்தாருங்கள், பழம் சாப்பிடுங்கள்" என்று சொன்னான்.

அருணகிரிக்கு என்னசெய்வது என்று புரியவில்லை. வேண்டாம் என்று சொல்லவும் வாய் வரவில்லை. விரும்பி வாங்கிக்கொள்ளவும் தைரியம் ஏற்படவில்லை. இருந்தாலும் கடைசியில் எப்படியோ துணிவை வரவழைத்துக்கொண்டு, "வேண்டாம். என்னிடம் ஆப்பிள் இருக்கிறது" என்றான்.

"இருந்தால் என்ன? இதையும் சாப்பிடுங்கள். பரவாயில்லை" என்று அந்த வாலிபன் பிடிவாதமாக அந்தப் பழங்களை அவன் மடியில் வைத்துவிட்டான். முன்பின் பரிச்சயமற்ற பிரயாணிகளான அவர்கள் நடந்துகொள்ளும் விதத்தைக் கண்டு 'நமக்கு மரியாதையாக நடந்துகொள்ளும் விதம் தெரியாமற் போய்விட்டதே!' என்று அவனுக்கு வெட்கமாகப் போய்விட்டது. அதை மறைக்க எண்ணி, "நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டான்.

"நாங்களா? திருச்சிராப்பள்ளிக்கு!"

அதற்குப் பிறகு சிறிது நேரம் மௌனம் நிலவியது. வாழைப்பழத்தைச் சாப்பிட்டு முடித்ததும் அந்த வாலிபன், "ஆமாம், நீங்கள் எங்கே போகிறீர்களோ?" என்று பேச்சை மறுபடியும் தொடர்ந்தான்.

"நானா? தஞ்சாவூருக்கு!"

"தஞ்சாவூர்தான் சொந்த ஊரோ?"

"ஆமாம்."

"நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?"

"சும்மாத்தானிருக்கிறேன்."

"உங்கள் தகப்பனார்?"

"வக்கீலாயிருக்கிறார்."

"அவர் பெயர் என்னவோ?"

"ரத்னவேலு உடையார்."

அதைக் கேட்ட வாலிபனின் முகம் கம்பீரமுற்றது. பெண்ணும் தன்னைச் சரிசெய்து கொண்டு உட்கார்ந்தாள்.

"அப்படியா? அவர் பிள்ளையா நீங்கள்! கொஞ்ச நாட்களுக்கு முன்னால் பத்திரிகைகளில் ஒரு கல்யாண விளம்பரம் வந்திருந்ததே! அது உங்களுக்காகத்தானோ?"

அருணகிரி பதில் சொல்ல வில்லை; தலை குனிந்தான்.

"உங்களை இங்கே பார்க்க நேர்ந்தது குறித்துச் சந்தோஷம். என் நண்பர் ஒருவர் தம் பெண்ணைத் தங்களுக்குத் தரலாம் என்றிருக்கிறார்" என்றான் அந்த வாலிபன்.

"இந்தக் கல்யாண விளம்பரம் வந்தது முதல் என் பெயர் அடிபடுகிறாப்போலிருக்கிறது. போகிற இடங்களில் எல்லாம் இதைப் பற்றித்தான் விசாரிக்கிறார்கள். ஆனால் ..."

"ஆனால் என்ன?"

"அந்த விளம்பரம் என் விருப்பத்துக்கு விரோதமாக வெளிவந்திருக்கிறது. என்

# உனக்கும் பேப்பே!













தகப்பனார் விளம்பரம் போட்டு விட்டார். ஆனால் எனக்கு இது வரையில் கல்யாணம் செய்து கொள்ளும் உத்தேசம் இல்லை. அதிலும் விளம்பரக் கல்யாணம் மகா மோசம். விளம்பரத்தைப் பார்த்துப் பெண்ணைக் கொடுக்க வருகிறவர்கள் மகா மட்டமானவர்களாயிருக்கவேண்டும். பகுத்தறிவு வாய்ந்த எவனும் விளம்பரத்தை விரும்ப மாட்டான்."

"அப்படியா?"

"ஆமாம்."

இதற்குமேல் அந்த வாலிபன் ஒன்றும் கேட்கவில்லை. அருணகிரியும் பேசவில்லை. சிறிது நேரத்துக் கெல்லாம் அந்த வாலிபன், "அமிர்தம்?" என்று அழைத்தான்.

அந்தப் பெண் கனவு கண்டு விழித்தவள்போல், "என்ன?" என்று கேட்டாள்.

"என்ன, நீ இன்னும் வாழைப்பழத்தைச் சாப்பிட வில்லையா?

"சாப்பிடுகிறேன்" என்றாள் அவள் வறண்ட குரலில். அவள் ஏன் அப்படி அலட்சியமாக இருக்கிறாள் என்று அருணகிரிக்குப் புரியவில்லை. அவன் தன் படுக்கையில் படுத்துக் கொண்டான். "ஆகா! என்ன அழகு! அதற்கேற்றாற்போலப் பெயரும்தான் என்ன பொருத்தம்? அமிர்தம் என்ற பெயர் காதுக்கு எவ்வளவு அமிர்தமாயிருக்கிறது!" இவ்வாறு சிந்தனை செய்தான்.

திருச்சியில் வாலிபன் தன் தங்கையுடன் இறங்கி விட்டான். அப்புறம்தான் அருணகிரிக்கு 'அந்த வாலிபனின் விலாசத்தைக் கேட்டு வைத்துக் கொள்ளாமற் போனேனே!' என்ற வருத்தம் ஏற்பட்டது.

பொழுது 'பல பல' வென்று விடியும்பொழுது வண்டி தஞ்சாவூரை அடைந்தது.

வீடு போய்ச் சேர்ந்ததும், தகப்பனார் அவனுக்காக ஒரு பெண் ஏற்பாடு செய்திருக்கிறார் என்றும், அவனுடைய சம்மதம் கேட்டு முடிவு செய்வதற்காகத் தான் தந்தியடித்து அவனை வரவழைத்திருக்கிறார்கள் என்றும் அருணகிரிக்குத் தெரிந்தது.

உடையார் கச்சேரிக்குப் போனதும் அருணகிரியிடம் அவன் தாயார் வந்து, "இதோ பார்! இனிமேல் உன்னால் எங்களை ஏமாற்ற முடியாது. உன் மனதுக்குப் பிடித்த பெண் கிடைத்துவிட்டாள். வயது பதினெட்டாகி விட்டது. பார்ப்பதற்கு லக்ஷ்மி போலிருக்கிறாள். இந்த வருஷம் இண்டர் பரீக்ஷை எழுதப் போகிறாளாம். குடும்பமும் நல்ல குடும்பம். நீ இங்கிருந்து புறப்பட்டுப்போன மூன்றாவது நாளே பெண்ணின் தகப்பனாரிடமிருந்து கடிதம் வந்து விட்டது. பெண்ணின் போட்டோகூட வந்திருக்கிறது. வேண்டுமானால் பார்!" என்று சொல்லி போட்டோவை எடுத்துக் கொடுத்தாள்.

அருணகிரிக்குத் தாயாரை எதிர்த்துப் பேசத் துணிவு ஏற்படவில்லை. ஆகவே வேண்டா விருப்பாக அந்தப் படத்தைக் கையில் வாங்கிக் கொண்டான். ஆனால் இது என்ன? அவனுடைய பார்வை அந்தப் படத்திலேயே லயித்து விட்டதே! வைத்த கண்ணை அவன் வாங்கவே காணோமே?

வெகுநேரம் கழித்துச் சுய உணர்வு வந்தவனாய், "என் அம்மா, இந்தப் பெண்ணின் பெயர் என்ன?" என்று கேட்டான் அருணகிரி.

"அமிர்தம்."

"அமிர்தமா?" அருணகிரியின் வாய் அவனையறியாமலேயே அந்தச் சொல்லை உச்சரித்தது.

"இன்றே பதில் எழுதிவிட வேண்டும். பெண்ணின் தகப்பனார் இந்தப் பங்குனிக்குள் கல்யாணத்தை முடித்துவிட வேண்டும் என்கிறார்."

"முடிக்கட்டுமே. யார் வேண்டாம் என்றார்கள்?"

"இந்த மாதிரி யெல்லாம் நீ பேசினாயானால் தெரியுமா?" என்று கடிந்தாள் தாயார்.

அருணகிரிக்குத் தலை சுற்றியது. "எனக்கு ஒன்றும் தெரியாது. உனக்குத் தோன்றியதைச் செய்" என்று சொல்லிவிட்டு வெளியேறினான்.

அருணகிரி வீட்டில் இருக்கும்பொழுது அவனுக்குத் தெரியும்படியாகவே தந்தி கொடுக்கப்பட்டது. அவன் ஆட்சேபிக்கவில்லை. அன்று இரவு அவன் மூளையில் தோன்றாத பல யோசனைகள் தோன்றின. துயிலில் சந்தித்த அதே அமிர்தம் தன் உள்ளக் கோவிலில் குடிகொள்ளப் போகிறாள் என்பதை நினைத்ததும் அவனுடைய உடல் புல்லரித்தது.

தந்தி கொடுத்து இரண்டு நாட்களாகியும் பதில் வரவில்லை. அவன் மனம் பட்ட பாட்டை என்னவென்று சொல்லுவது? மூன்றாம் நாள் தபால்காரன் அருணகிரியின் கையில் ஒரு கவரைக் கொடுத்துச் சென்றான். அருணகிரி அதை அவசர அவசரமாகப் பிரித்துப் படிக்கலானான்:—

அன்புள்ள ..........அவர்களுக்கு

நமஸ்காரம். தங்கள் தந்தி கிடைத்தது. தங்களுடன் சம்பந்தம் ஏற்படுத்திக் கொள்ள இயலாமற் போனது குறித்து நாங்கள் வருந்துகிறோம். உங்களிடம் எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லி விடுவதுதான் உசிதம். அன்று என் பிள்ளை ராமலிங்கம் தன் தங்கையுடன் வந்து கொண்டிருந்த பொழுது, தற்செயலாகத் தங்கள் பிள்ளை அருணகிரியை ரயிலில் சந்தித்தானாம். பேச்சுவாக்கில் அவர் விவாகத்துக்கு விளம்பரம் போடுவது தவறான காரியம் என்றும், தமக்கு விளம்பரமணம் செய்து கொள்வதில் சிறிதும் விருப்பமில்லை என்றும் தெரிவித்தாராம். இம்மாதிரி நிலைமையில் நாம் சம்பந்தம் செய்து கொள்ளாமல் இருப்பதுதானே நல்லது? ஆகவேதான் இந்த முடிவுக்கு வர நேர்ந்தது.

தங்கள்

..........................

அருணகிரியின் கையிலிருந்த கடிதம் படித்து முடித்ததும் கீழே நழுவி விழுந்துவிட்டது.

## ஏதாவது கொடுங்கள்!















## 3 சுங்கவரி நீக்கம்

**ப**ம்பாயில் கவர்னர் லார்ட் வில்லிங்டனைச் சந்தித்துப் பேசிய பிறகு மகாத்மா பூனாவுக்குச் சென்றார். அங்கே ஸ்ரீ கோகலே மகாத்மாவை மிக்க அன்புடன் வரவேற்றார். இந்திய ஊழியர் சங்கம் என்ற பெயருடன் ஸ்ரீ கோகலே நடத்தி வந்த ஸ்தாபனம் மிகவும் பிரசித்தி பெற்றது. மெத்தப் படித்த அறிவாளிகள் பலர் அந்த ஸ்தாபனத்தில் அங்கத்தினராகி யிருந்தார்கள். சொற்ப ஊதியம் பெற்றுக் கொண்டு அவர்கள் தேச சேவையும் சமூக சேவையும் செய்து வந்தார்கள். ஸ்ரீ கோகலேயைப் போலவே இந்திய ஊழியர் சங்கத்தைச் சேர்ந்த அனைவரும் இந்திய அரசியலில் 'மிதவாதக் கொள்கை'யைக் கடைப்பிடித்தார்கள். ஸ்ரீ கோகலேக்குப் பிறகு மேற்படி சங்கத்தின் தலைவராகிப் பிரசித்தி யடைந்தவர் மகா கனம் வி. எஸ். சீனிவாச சாஸ்திரியார். இன்னொரு பிரபல அங்கத்தினர் பண்டித ஹிருதயநாத குன்ஸ்ரு. தற்சமயம் ஹரிஜன சேவா சங்கத்தின் காரிய தரிசியாக இருந்து அரும்பெரும் தொண்டு செய்துவரும் ஸ்ரீ தக்கர் பாபாவும் மேற்படி சங்கத்தைச் சேர்ந்தவரே.

காந்திஜி இந்திய ஊழியர் சங்கத்தில் சேர்ந்துவிட வேண்டும் என்ற விருப்பம் ஸ்ரீ கோகலேக்கு இருந்தது. காந்தி மகாத்மாவுக்கும் அந்த ஆசை இருந்தது. ஆனால் இந்திய ஊழியர் சங்கத்தின் மற்ற அங்கத்தினர் காந்திஜியுடன் பல விஷயங்களையும் பற்றிப் பேசியபோது சங்கத்தின் கொள்கைகளுக்கும் மகாத்மாவின் கொள்கைகளுக்கும் மிக்க வித்தியாசம் இருப்பதைக் கண்டார்கள். ஆகவே காந்திஜியை இந்திய ஊழியர் சங்கத்தில் சேர்த்துக்கொள்வது உசிதமா யிராது என்று கருதினார்கள். மகாத்மாவுக்கு இது ஏமாற்றமா யிருந்தது. தம்முடைய கொள்கைகளுக்கு எந்தவிதப் பங்கமும் இல்லாமல் இந்திய ஊழியர் சங்கத்தில் சேர்ந்து தொண்டு செய்யலாம் என்று மகாத்மா நினைத்தார். மகாத்மா இந்திய ஊழியர் சங்கத்தில் சேர வேண்டும் என்பதில் மகாத்மாவைக் காட்டிலும் ஆர்வம் கொண்டிருந்தவர் ஸ்ரீ கோகலே. ஆனால் அவர் சங்கத்தின் மற்ற அங்கத்தினர் சொல்வதற்கு மாறாக நடக்க விரும்பவில்லை. அவர் மகாத்மாவுக்குச் சமாதானமாகக் கூறியதாவது :—"உங்களுடைய கொள்கை எப்படி யிருந்தாலும் நீங்கள் ராஜி செய்து கொள்வதில் ஆர்வம் கொண்டவர் என்பதை இந்தச் சங்கத்தின் அங்கத்தினர் இன்னும் உணரவில்லை. அதைச் சீக்கிரத்தில் அவர்கள் உணர்ந்து தங்களைச் சேர்த்துக் கொள்வார்கள் என்று நம்புகிறேன். அப்படி அவர்கள் சேர்த்துக் கொள்ளாவிட்டாலும் தங்களிடம் அவர்களுக்கு மரியாதையும் அன்பும் இல்லையென்று எண்ணவேண்டாம். உண்மையில் தங்களிடம் உள்ள மரியாதையினாலேயே தங்களுடைய தன்மதிப்புக்கும் கொள்கைகளுக்கும் பங்கம் வரக் கூடாது என்று கருதுகிறார்கள். தாங்கள் விதிமுறைகளின்படி அங்கத்தினர் ஆகாவிட்டாலும் என்வரையில் தங்களைச் சங்கத்தில் சேர்ந்தவராகவே கருதப் போகிறேன்."

இதற்குப் பதிலாக மகாத்மா ஸ்ரீ கோகலேக்கு நன்றி தெரிவித்துவிட்டுக் கூறியதாவது:—"இந்திய ஊழியர் சங்கத்தில் நான் சேர்ந்தாலும் சேராவிட்டாலும் போனிக்ஸிலிருந்து நான் கூட்டி வந்தவர்களோடு தனியாக ஓர் ஆசிரமம் ஸ்தாபித்துத் தொண்டு செய்ய விரும்புகிறேன். நான் குஜராத்தைச் சேர்ந்தவனாதலால் அங்கே ஆசிரமம் ஸ்தாபிப்பது பொருத்தமாயிருக்கும். தங்களுடைய ஆசீர்வாதம் வேண்டும்."

இதைக்கேட்ட கோகலே, "ரொம்ப சந்தோஷம். அப்படியே செய்யுங்கள். ஆனால் ஆசிரமம் ஸ்தாபிப்பதற்கு வேண்டிய செலவு

களுக்குப் பணம் வேறு யாரிடமும் கேட்கக் கூடாது. 'செலவு முழுதும் நானே கொடுப்பதற்கு விரும்புகிறேன்!" என்றார்.

மகாத்மாவுக்கு அளவற்ற ஆனந்தம் உண்டாயிற்று. இந்தியாவுக்கோ காந்திஜி புதிதாக வந்திருக்கிறார். ஆசிரம ஸ்தாபனத்துக்குப் பணமும் அவசியம். தெரியாத மனிதர்களிடம் போய்க் கேட்கும் அவசியமின்றி ஸ்ரீ கோகலே நிதிப் பொறுப்பை ஒப்புக்கொண்டது ஒரு பெரிய சுமை நீங்கியதுபோல் அல்லவா? அதோடு தமக்கு ஆலோசனை சொல்லி உதவி செய்வதற்கு ஒரு ஆப்தர் இருக்கிறார் என்ற எண்ணம் காந்திஜிக்கு உற்சாகம் ஊட்டியது.

ஸ்ரீ கோகலே வாய்ப்பேச்சோடு நில்லாமல் இந்திய ஊழியர் சங்கத்தின் பொக்கிஷதாரரைக் கூப்பிட்டுக் காந்திஜியின் பெயரால் ஒரு பெயரேடு வைத்துக்கொண்டு அவர் கேட்கும் பணத்தையெல்லாம் கொடுத்து வரும்படி உத்தரவிட்டார்.

காந்திஜி பூனாவை விட்டுப் புறப்படுவதற்கு முன் இந்திய ஊழியர் சங்கம் அவருக்கு ஒரு விருந்து நடத்தியது. மகாத்மா விரும்பிய பழங்களும் கொட்டைகளும்தான் விருந்தில் முக்கிய உணவுப் பொருள்கள். கோகலேயின் உடல்நலம் அப்போது பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தது. கோகலே தங்கியிருந்த அறையிலிருந்து விருந்து நடந்த இடம் சில அடி தூரத்திலேயே இருந்தது. கோகலே அந்த இடத்துக்கு நடந்து வந்தார். விருந்துக்கு அவர் வரவேண்டிய அவசியமில்லை என்று காந்திஜியும் பிறரும் கூறியதைக் கோகலே கேட்கவில்லை. மகாத்மாவினிடம் அவர் கொண்டிருந்த அன்பு காரணமாக வந்தான் வருவேன் என்று பிடிவாதம் பிடித்துக்கொண்டு வந்தார். விருந்து நடந்த இடத்துக்கு வந்ததும் மூர்ச்சை அடைந்து விழுந்துவிட்டார். அங்கிருந்து அவரைத் தூக்கிக்கொண்டுபோய் அவருடைய அறையில் சேர்த்தார்கள். இதற்குமுன் சில தடவை இம்மாதிரி கோகலே மூர்ச்சித்து விழுந்திருந்தபடியால் அதைக்குறித்து யாரும் பயப்படவில்லை. சாதாரண விஷயம் என்றே நினைத்தார்கள். கோகலேயும் மூர்ச்சை தெளிந்து சுய உணர்வு பெற்றவுடனே விருந்து நடக்கட்டும் என்று சொல்லி அனுப்பினார். அவ்வாறே விருந்து நடந்தது.

ஆனால் கோகலே இந்த முறை மூர்ச்சையடைந்தது சாதாரண விஷயமாகப் போய் விடவில்லை. அதற்குப் பிறகு கோகலே உடல் வலிவு பெறவில்லை. அந்திய காலம் அவரை நெருங்கி வந்து கொண்டிருந்தது.

* * *

பூனாவிலிருந்து காந்திஜி இராஜகோட்டைக்கும் போர்பந்தருக்கும் சென்றார். அவருடைய தமையனார் முன்னமே காலஞ்சென்று விட்டார். காலஞ்சென்றவரின் மனைவியையும் மற்ற உறவினரையும் பார்க்க விரும்பிப் போனார்.

காந்தி மகாத்மாவின் உடை நாளுக்கு நாள் எளிமையாகி வந்திருந்தது. பாரிஸ்டர் வேலை தொடங்கியபோது மேனாட்டு நாகரிக உடுப்புத் தரித்திருந்தார். * தென்னாப்பிரிக்காவில் போராட்டத்தில் இறங்கிய பிறகு அங்கே இந்தியத் தொழிலாளர் தரித்த எளிய உடையைத் தரிக்கத் தொடங்கினார். ஆனால் இதுவும் பாதி மேனாட்டு முறையிலேயே இருந்தது. தென்னாப்பிரிக்காவை விட்டு இந்தியா வந்தபோது கத்தியவாரில் அந்தஸ்து வாய்ந்தவர்கள் உடுக்கும் உடை தரித்திருந்தார். இந்த உடையில் வேஷ்டி, உட்சட்டை, நீண்ட மேலங்கி, அங்கவஸ்திரம், தலைப்பாகை ஆகியவை இருந்தன. பம்பாயிலிருந்து ராஜகோட்டைக்குக் கிளம்பியபோது மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்ய மகாத்மா நிர்மானித்தார். அத்துடன் கத்தியவார் உடையில் நீண்ட மேலங்கியையும் உத்தரீயத்தையும் புறக்கணித்து விட்டார். அலங்காரமான தலைப்பாகைக்குப் பதிலாக எட்டணா விலையுள்ள காஷ்மீர் குல்லா ஒன்று வாங்கிவைத்துக் கொண்டார். மூன்றாம் வகுப்பில் ஏழைகளோடு பிரயாணம் செய்தபோது இம்மாதிரி எளிய உடுப்புத் தரிப்பதுதான் உசிதம் என்று கருதினார்.

அப்போது பம்பாய் மாகாணத்தில் சில இடங்களில் பிளேக் நோய் பரவியிருந்தது. ஆகையால் வழியில் வாத்வான் என்னும் ஸ்டேஷனில் பிரயாணிகள் வைத்திய பரிசோதனை செய்யப் பட்டார்கள். காந்திஜிக்குக் கொஞ்சம் சுரம் இருந்தது. அவரைப் பரிசோதனை செய்த உத்தியோகஸ்தர் "நீர் இராஜகோட்டை சென்றதும் அங்குள்ள பெரிய வைத்திய அதிகாரியிடம் சென்று ஆஜர் கொடுக்க வேண்டும்" என்று கட்டளை யிட்டார்.

அந்த வாத்வான் ஸ்டேஷனிலேயே மோதிலால் என்னும் தையற்காரர் ஒருவர் வந்து காந்திஜியைச் சந்தித்தார். அப்போது பிரிட்டிஷ் ஆட்சிக்கு நேராக உட்பட்ட பிரதேசத்திலிருந்து கத்தியவார் சமஸ்தானப்

---

* இத்தகைய மேனாட்டு நாகரிக உடை தரித்திருந்தபோது எடுத்த காந்தி மகாத்மாவின் தோற்றம் இந்த வாரக் "கல்கி" அட்டையை அலங்கரிக்கிறது.

பிரதேசத்திற்குள் நுழையும் இடத்தில் ஒரு சுங்கம் ஏற்படுத்தியிருந்தார்கள். இது வீரம்காம் ஸ்டேஷனில் இருந்தது. பிரயாணிகளையும் அவர்களுடைய சாமான்களையும் பரிசோதனை செய்து சுங்கவரி விதித்து வசூலித்தார்கள். இதனால் பிரயாணிகள் மிக்க தொந்திரவுக்கு ஆளானார்கள். மேற்படி மோதிலால் என்னும் தையற்காரர் மகாத்மாவிடம் வீரம்காம் சுங்கவரி அநீதியைப்பற்றிப் பேசுவதற்காகவே வந்திருந்தார். அதைக் குறித்த எல்லா விவரங்களையும் எடுத்துச் சொன்னார். காந்திஜிக்கு அப்போது சுரமாயிருந்தபடியால் அதிகம் பேச முடியவில்லை. ஆகையால் எல்லா விவரங்களையும் தெரிந்துகொண்டு ஒரே ஒரு கேள்வி கேட்டார்.

“நீங்கள் சிறை புகுவதற்குச் சித்தமா?” என்பதுதான் அந்தக் கேள்வி.

சிறை என்ற வார்த்தையைக் கேட்டு மோதிலால் பயப்பட்டு விடவும் இல்லை; ஆவேசமான பதில் சொல்லவும் இல்லை. “தாங்கள் தலைமை வகித்து நடத்தினால் நானும் இன்னும் பலரும் சிறை புகுவதற்குத் தயார். தாங்கள் கத்தியவாரைச் சேர்ந்தவர்கள். ஆகையால் தங்கள் பேரில் எங்களுக்கு முதல் உரிமை உண்டு. தாங்கள் தலைமை வகித்து நடத்தி இந்த அநீதியை ஒழிக்கவேண்டும்” என்று நிதானமாகப் பதில் சொன்னார். மகாத்மாவுக்கு இந்தப் பதில் மிகவும் பிடித்திருந்தது. தையற்கார மோதிலால் மீது மதிப்பும் அபிமானமும் ஏற்பட்டன. “சரி; பார்க்கலாம்” என்று மகாத்மா பதில் சொல்லிவிட்டுப் பிரயாணத்தைத் தொடர்ந்தார்.

* * *

மகாத்மா இராஜகோட்டையை அடைந்ததும் பெரிய சுகாதார அதிகாரியைப் பார்க்கப் போனார். இதற்குள் இராஜகோட்டையில் மகாத்மாவின் பெயர் பிரசித்தி அடைந்திருந்தது. எனவே அந்த உத்தியோகஸ்தர் மகாத்மா தம்மிடம் வர நேர்ந்தது பற்றி வருத்தப்பட்டார். ரயிலில் வைத்திய பரிசோதனை செய்தவர் மீது கோபம் அடைந்தார். மகாத்மா இனித் தம்மிடம் வர வேண்டியதில்லையென்றும் மகாத்மா இருக்கும் இடத்துக்கு இன்ஸ்பெக்டரை அனுப்பி வைப்பதாகவும் கூறினார்.

மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்தபடியினால் மகாத்மாவுக்கு மேற்கூறிய அநுபவம் கிடைத்தது. மூன்றாம் வகுப்பில் பிரயாணம்செய்து பிரயாணிகள் அடையும் கஷ்டங்களை நேரில் தெரிந்துகொள்ளுதில் மகாத்மாவுக்கு எப்போதும் ஆர்வம் இருந்தது. மகாத்மா இது சம்பந்தமாகக் கூறியிருப்பதாவது :—“பெரிய மனிதர்கள் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்யப் பிரியப்பட்டால் ஏழைகள் உள்ளாக வேண்டியிருக்கும் எல்லா விதிகளுக்கும் அவர்களும் உள்ளாக வேண்டியது அவசியம். ரயில் உத்தியோகஸ்தர்களும் பாரபட்சமின்றி நடந்துகொள்ள வேண்டும். அவர்கள் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளைச் சகோதர மனிதர்களாகவே பாவிப்பதில்லை என்பதும் கேவலம் ஆடு மாடுகளாகப் பாவிக்கிறார்கள் என்பதும் என்னுடைய அநுபவம். படித்த பணக்கார வகுப்பாரில் சிலர் தாங்களாகவே ஏழைகளின் அந்தஸ்தை ஏற்க முன்வர வேண்டும். அவர்கள் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்யவேண்டும். ஏழைகளுக்குக் கிடைக்காத எந்த வசதியையும் தாங்கள் பெறக்கூடாது. பிரயாணத்தில் ஏற்படும் அவமதிப்புகளுக்கும் அநீதிகளுக்கும் தலைகுனிந்து போகாமல் அவற்றைத் தொலைப்பதற்காகப் போராட வேண்டும்.”

இவ்வாறு எழுதிய மகாத்மா காரியத்திலும் அவ்விதமே நடந்து காட்டியிருக்கிறார்.

* * *

கத்தியவாரில் காந்திஜி எந்தப் பகுதிக்குப் போனாலும் வீரம்காம் சுங்க வரித் தொல்லையைப் பற்றி ஜனங்கள் புகார் செய்தார்கள். இது சம்பந்தமாக லார்ட் வில்லிங்டன் கொடுத்திருந்த வாக்குறுதியை மகாத்மா பயன்படுத்திக் கொள்ள விரும்பினார். வீரம்காம் சுங்க வரி சம்பந்தமாகச் சகல விவரங்களையும் சேகரித்து ஜனங்களுக்கு அது பெரிய அநீதிதான் என்பதை உறுதி செய்துகொண்டார். பிறகு பம்பாய் அரசாங்கத்துக்கு அந்த விவரங்களைத் தெரிவித்துக் கடிதம் எழுதினார். முதலில் லார்ட் வில்லிங்டனுடைய காரியதரிசியையும் பிறகு லார்ட் வில்லிங்டனையும் பேட்டி கண்டார். அவர்கள் வாயினால் அநுதாபம் தெரிவித்து விட்டு, “இது இந்திய சர்க்காரைச் சேர்ந்த விஷயம். ஆகையால் இந்திய சர்க்காருக்கு எழுதிக் கொள்ளுங்கள்” என்று சொல்லிவிட்டார்கள்.

மகாத்மா இந்திய சர்க்காருக்கும் எழுதினார். பயன் ஒன்றும் கிட்டவில்லை. அப்போது கவர்னர் ஜெனரலாயிருந்த லார்ட் செம்ஸ்போர்டைச் சந்தித்து வீரம்காம் சங்கத்தைப்பற்றிய விவரங்களை எடுத்துக்

கூறினர். "இப்படியும் உண்டா?" என்று லார்ட் செம்ஸ்போர்டு அதிசயப்பட்டு விசாரணை நடத்தித் தக்கது செய்வதாக வாக்களித்தார். சில காலைக்கெல்லாம் வீரம்காம் சுங்கம் எடுத்து விடப்பட்டது!

சர்க்காருடன் கடிதப் போக்குவரவு நடந்து கொண்டிருந்த காலத்தில் மகாத்மா காந்தி பகஸ்ரா என்னுமிடத்தில் பேசியபோது "வேறு வழிகள் பயன் தராவிட்டால் சத்தியாக்கிரஹத்தைக் கைக்கொள்ள நேரலாம்" என்று குறிப்பிட்டிருந்தார். பின்னர் தான் மகாத்மா பம்பாய் சர்க்காரின் காரிய தரிசியைப் பார்க்க நேர்ந்தது. காந்திஜியின் மேற்படி பேச்சைக் காரியதரிசி குறிப்பிட்டு, "இந்தப் பயமுறுத்தலுக்குச் சர்க்கார் இணங்கி விடுவார்கள் என்பது உம்முடைய எண்ணமா?" என்று கேட்டார்.

"நான் கூறியதில் பயமுறுத்தல் ஒன்றுமில்லை. குறைகளை நிவர்த்தி செய்துகொள்ள நியாயமான வழி ஒன்றை மக்களுக்கு எடுத்துக் காட்டினேன். சத்தியாக்கிரஹம் பலாத்காரம் சிறிதும் அற்ற ஆயுதம். அதைப்பற்றி ஜனங்களுக்கு எடுத்துச் சொல்வது என் கடமை. பிரிட்டிஷ் அரசாங்கம் மிக்க வலிமை பொருந்தியது என்று எனக்குத் தெரியும். ஆனால் சத்தியாக்கிரஹம் தோல்வியே அறியாத ஆயுதம் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை" என்று மகாத்மா காந்தி பதில் அளித்தார்.

வீரம்காம் சுங்கவரியைப் பற்றிய கிளர்ச்சியை மகாத்மா காந்தி இந்தியாவில் சத்தியாக்கிரஹ இயக்கத்தின் ஆரம்ப நடவடிக்கை என்று கருதினர். அது வெற்றிகரமாக முடிந்தது ஒரு சுபசகுனம் அல்லவா?

## காரு வாங்கலாம்!

[கடல் நீரிலிருந்து பெட்ரோல் கண்டு பிடிக்கப்பட்டதாக வந்த செய்தியைப் படித்த ஒரு பெண், தான் நெடுநாளாகக் கார்வாங்க வேண்டுமென்று கண்ட கனவு பலித்ததாகச் சொல்லுகிருள்.]

★

காரு வாங்கலாம் — மோட்டார்
கார் வாங்கலாம் — நம்ம
கௌரவத்தை நிலைநிறுத்தக்
காரு வாங்கலாம்!

தண்ணீர் விட்டால் காரு ஓடுமாம் — பெட்ரோலுக்குத்
துகிணைதோம் போடவேண்டாமாம்—செய்த
புண்ணியத்தால் கடலெல்லாம் இனி — பெட்ரோல்
எண்ணெயாக மாறப்போகுதாம்!

ஊரைச் சுற்றக் காரிருந்தால்தான் — அக்கா!
உயர்ந்தவரென்று மதிப்புத்தோணுது
ஆயிரந்தான் சிறப்பிருந்தாலும் — கொஞ்சம்
ஆடம்பரமும் வேண்டியிருக்குது!

'காரு வாங்கும் கனவை மறந்திடு — இது
காலமல்ல!' என்று அவர் சொன்னர்
'வாரிவிடும் பணத்தைப் பெட்ரோலும் — பின்னல்
வருத்தப்பட்டு நோகணும்!' என்ருர்.

கடவுள் தந்த கருணையால், அக்கா! — பெரிய
கடல் முழுதும் பெட்ரோலாகுதாம்!
தடை இல்லாமல் காரு வாங்கலாம் — அதில்
தயக்கமின்றி ஏறிப்போகலாம்!

பீச்சுக் ' கரைக்குப் போகிறபோது — அக்கா!
பெரிய குடத்தை எடுத்துப் போகலாம்
ஆச்சு என்ருல் ஐந்தாறு குடம் — தண்ணீர்
அள்ளி ஊத்திக் காரை முடுக்கலாம்! —காட்டூர் கண்ணன்

# புதிய ஆபத்து

**ரஜனி**

கொழும்பு, மார்ச், 20—

இலங்கை ரப்பர் தோட்டங்களில் வேலை செய்யும் இந்தியத் தொழிலாளருக்கு ஒரு புதிய ஆபத்து திடீரென்று ஏற்பட்டிருக்கிறது. இந்த ஆபத்து மார்ச்சு மாத முடிவுக்குள் மிகவும் நெருக்கடியான நிலைமையை அடையும் போலத் தோன்றுகிறது. "பிரஜா உரிமை வேண்டாம்; பிழைப்பில் மண்ணைப் போடாமலிருந்தால் அதுவே போதும்" என்று அலறும் நிலைமைக்கு இந்தியத் தொழிலாளர்கள் உட்படுத்தப்பட்டிருக்கிறார்கள். இலங்கையில் மொத்தம் ஆறு லட்சம் ஏக்கர் நிலங்களில் ரப்பர் சாகுபடி செய்யப்படுகிறது. அவற்றில் இரண்டு லட்சம் ஏக்கர் தோட்டங்கள் லாபகரமாக வேலை செய்யவில்லையாம். அரசாங்கம் பண உதவி செய்யாவிட்டால் தோட்டங்களை மூடிவிடுவோமென்று ஐரோப்பியத் தோட்ட முதலாளிகள் பயமுறுத்தினார்கள். தோட்டங்கள் மூடப்பட்டால் பாதிக்கப்படுபவர்கள் இந்தியர்கள் தானே யென்று நினைத்து அரசாங்கம் பணிய மறுத்தது. இதன் விளைவாகத் தோட்டங்கள் ஒவ்வொன்றாக மூடப்பட்டு ஆயிரக் கணக்கான இந்தியத் தொழிலாளர்கள் பிழைக்க வழியின்றி நடுச்சந்தியில் நிற்கிறார்கள். மார்ச்சு மாதம் 31-ம் தேதிக்குள் சுமார் ஆறுயிரம் இந்தியர்கள் வேலையை இழந்து தவிப்பார்களென்று மதிப்பிடப்படுகிறது.

இதைப்பற்றி இலங்கைப் பார்லிமெண்டில் ஸ்ரீ ஜார்ஜ் ஆர். மேத்தா என்ற இந்திய அங்கத்தினர் ஒரு கேள்வி கேட்டார். அதற்குப் பிரதம மந்திரி ஸ்ரீ டி. எஸ். சேனநாயகா அளித்த பதிலில் விஷமம் தொனித்தது. 1931ம் ஆண்டில் இதே போன்ற பொருளாதார மந்தம் ஏற்பட்ட பொழுது இந்தியத் தொழிலாளர் இந்தியாவுக்குத் திரும்பியதாயும் இப்பொழுதும் அவர்கள் அதே போலச் செய்து இலங்கை அரசாங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டுமென்றும் அவர் சொன்னார். தோட்டங்கள் மூடப்பட்டு அதனால் வேலையை இழக்கும் இந்தியர்கள் இந்தியாவுக்குத் திரும்பிவிட வேண்டுமே தவிர அவர்களுக்கு வேறு வேலை கிடைக்க உதவி புரியும் எண்ணம் அரசாங்கத்துக்குச் சிறிதும் கிடையாதென்பதுதான் இதன் பொருள். வேலையற்ற சிங்களவர்களுக்கு வேலை கொடுப்பதற்காக இதுவரை பல கோடி ரூபாய்கள் செலவிடப் பட்டிருப்பதும், பத்து மந்திரிகளடங்கிய ஒரு கமிட்டியினர் மேலும் ஒரு கோடி ரூபாய் செலவிடுவதற்கு ஒரு திட்டத்தை வெளியிட்டிருப்பதும் இங்கு குறிப்பிடத் தகுந்தது.

## மனம் இருந்தால்......

முடிந்த அளவு இந்தியர்களை இலங்கையிலிருந்து விரட்டும் எண்ணம் இலங்கை அரசாங்கத்துக்கு இல்லையென்றால் நொடிப் பொழுதில் இந்த நெருக்கடியைத் தீர்த்து விடலாம். இலங்கை ரப்பரை அதிக விலை கொடுத்து வாங்கிக் கொள்ளத் தயாரென்று சோவியத் ரஷ்யா கூறியது. அதை இலங்கை அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருக்கலாம். ரப்பருக்கு அதிக விலை கிடைத்தால் தோட்டங்களை மூட வேண்டிய அவசியமே இருக்காது. இரண்டாவதாக ரப்பர் தோட்டங்கள் லாபகரமாக வேலை செய்யவில்லை என்பது முற்றிலும் உண்மையென்று நம்பி விடுவதற்கில்லை. யுத்தகாலத்தில் கிடைத்த கொள்ளை லாபம் இப்பொழுது கிடைக்கவில்லை. இதை உத்தேசித்தே அரசாங்கம் பண உதவி செய்து லாபத்தை யுத்தகால அளவிலேயே வைக்காவிட்டால் தோட்டங்களை மூடிவிடுவோமென்று தோட்ட முதலாளிகள் பயமுறுத்தினர். அரசாங்கம் பணியுமென்று நினைத்த அவர்களின் நிலைமை, யானை தன்னுடைய தலையிலேயே மண்ணை வாரிப் போட்டுக் கொண்ட கதை போலாகி விட்டது.

மூடும் தோட்டங்களை அரசாங்கம் விலைக்கு வாங்கி அவைகளிலுள்ள தொழிலாளரையே கூட்டுறவு முறையில் வேலை செய்யச் சொல்லலாம். இது மாதிரி சில தோட்டங்கள் சிங்களத் தொழிலாளருக்குக் கொடுக்கப் பட்டிருக்கின்றன. சென்ற 1939-ம் வருடத்திலிருந்து 1947-ம் வருடம் வரையில் 11,000 ஏக்கர் விஸ்தீரணமுள்ள தோட்டங்களை 70 லட்சம் ரூபாய் கொடுத்து அரசாங்கம் வாங்கிச் சிங்கள கிராமவாசிகளுக்குக் கொடுத்திருக்கிறது. இதே போலப் பல தலைமுறைகளாக இலங்கையில் உடல் தேய உழைத்த இந்தியத் தொழிலாளருக்கும் அவர்களை நீக்கும் தோட்டங்களை அரசாங்கம் விலைக்கு வாங்கிக் கொடுத்துக் கூட்டுறவு முறையிலே வேலை செய்யச் சொல்லலாம். ஆனால் இந்தியர்



"நேற்று எழுபது ரூபாய்க்குத் தருவதாகச் சொன்னாயே! அதே மாட்டுக்கு இன்றைக்கு ஏன் எண்பது ரூபாய் விலை சொல்கிறாய்?"

"நேற்றைக்கு அப்படி நான் சொன்னது நிஜந்தான். ஆனால் நேற்று இராத்திரி மாடு என் வீட்டுக்குள் புகுந்து இரண்டு படி அரிசியையும் அரைப் படி பருப்பையும் தின்று ஆறு புட்டி கிரோஸின் ஆயிலையும் குடித்துவிட்டதே!"

---

களின் ஜனத்தொகையைக் குறைக்க விரும்பும் அரசாங்கத்துக்கு இந்த யோசனைகளெல்லாம் காதில் ஏறுமா?

## கலை வளர்ச்சிக்கும் தடையா?

இலங்கையிலிருந்து நூற்றுக்கணக்கான மாணவர்கள் இந்தியாவுக்குச் சென்று இந்திய சர்வகலாசாலைகளிலே படித்துப் பட்டம் பெறுகிறார்கள். சிதம்பரத்திலுள்ள அண்ணாமலை சர்வகலாசாலை ஒரு சமயம் யாழ்ப்பாணத் தமிழர்களுக்கு மட்டுமே ஏகபோக உரிமையுள்ள சர்வகலாசாலையோ என்று நினைக்கும்படியா யிருந்தது. இன்றுகூட அநேகம் யாழ்ப்பாண மாணவர்களும் மாணவிகளும் அண்ணாமலை சர்வகலாசாலையில் சர்வ சுதந்திர பாத்தியதைகளோடு கல்வி பயிலுகிறார்கள். கண்டியிலுள்ள இந்திய மாணவர் விடுதியின் வருடாந்திர விழாவுக்காக இங்கு விஜயம் செய்திருக்கும் அண்ணாமலை சர்வகலாசாலை தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீ சிதம்பரநாதச் செட்டியார் கொழும்புக்கு வந்தவுடன், "உங்களுடைய சர்வகலாசாலையில் இலங்கை மாணவர்கள் சேர ஏதாவது தடை உண்டா?" என்றுதான் முதலில் கேட்டார்கள். ஒரு தடையும் கிடையாது என்று ஸ்ரீ செட்டியார் பதிலளித்தார்.

கலையும் கல்வியும் எல்லோருக்கும் பொதுவானவை என்ற விசாலமான நோக்குடன் இந்தியா நடந்து கொள்ளுகையில், யாழ்ப்பாணத்திலே ஒரு சிலர் விபரீதமான யோசனைகளைச் சொல்ல ஆரம்பித்திருக்கின்றனர். வருடந்தோறும் இந்தியாவிலிருந்து சங்கீத வித்வான்களும் நாதஸ்வர வித்வான்களும் யாழ்ப்பாணத்துக்கு விழாக் காலங்களிலே வந்து விட்டுப் போவது யாழ்ப்பாணத்திலுள்ள வித்வான்களுக்குப் பிழைப்பில்லாமல் செய்து விடுகிறதாம். ஆகையால் இந்திய வித்வான்கள் வருவதைத் தடை செய்ய வேண்டுமென்று பிரதமர் ஸ்ரீ சேனநாயகாவிடம் தூதுபோக வட இலங்கை இசையாளர் சங்கம் ஏகமனதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறது. இந்தத் தீர்மானத்தைப் பிரதம மந்திரி ஒப்புக்கொள்வாரானால் அதன் விளைவு என்ன ஆகுமோ?

அருங்கலைகளும் கலைவாணர்களும் ஒரு தேசத்திலிருந்து மற்றொரு தேசத்துக்கு அடிக்கடி போய்வருவதுதான் ஜன சமூகத்தின் கலாசார உறவை வளர்க்க உதவுவதாயிருக்கும். யாழ்ப்பாணத் தமிழ் வித்வான்களை இந்தியாவில் யாரும் தடை செய்யவேயில்லை. தடை செய்ய வேண்டுமென்ற வக்கிரபுத்தி படைத்தவர்களும் தென்னிந்தியாவில் கிடையாது. இதற்கு மாறாகக் கொழும்பு ரேடியோ நிலையத்தைச் சேர்ந்த வித்வான் திருச்சி ரேடியோவில் அடிக்கடி பாடுகிறார். கலையையும் கலைவாணர்களையும் கல்பகோடி காலமாகப் போற்றி ஆதரிக்கும் தமிழரிடையில் இந்தக் குறுகிய மனோபாவம் கிடையவே கிடையாது.

## சம்பளத்தில் வேற்றுமை கூடாது

இலங்கை இந்திய காங்கிரஸ் தோட்டங்கள் தோறும் கமிட்டிகளை திறவி யிருப்பதுபோல் பெண் தொழிலாளருக்கு மாதர் ஸ்தாபனங்களையும் திறவி யிருக்கிறது. கலகா ஜில்லாவில் செல்வி சிவபாக்கியம் பழனிச்சாமியின் தலைமையிலுள்ள மாதர் ஸ்தாபனம் மற்றவைகளுக்கு வழிகாட்டியாக இருந்து வருகிறது. தோட்டங்களிலே ஆண் பெண் தொழிலாளர் செய்யும் வேலையில் வித்தியாசமில்லை. இந்த நிலைமையில் ஆண் பெண் தொழிலாளரின் சம்பளத்தில் வேற்றுமை இருக்க நியாயமே யில்லை என்றும் இருவருக்கும் ஒரே மாதிரிச் சம்பளம் கொடுக்க வேண்டும் என்றும் கலகா கமிட்டி அதன் வருடாந்திரக் கூட்டத்தில் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி யிருக்கிறது.

நோய்க்குப் பிறகு வெகு
விரைவில் உடம்பு தேறவும்
பலஹீனத்தைப் போக்கவும்

# லெஸிவின்

போஷணைக்குப் பெயர்பெற்ற
சிறந்த டானிக்




உடலையும் நரம்புகளையும்
வலுப்படுத்தும்

●

லெஸிதின், வைடமின்கள்
கொய்னா சத்துக்கள்
அடங்கியது

●

எல்லா உயர்ந்த கெமிஸ்டுக
ளிடமும் கிடைக்கும்.

●

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா :: பம்பாய்

ஏஜண்டுகள் :

என். தேசாய் கௌண்டர் & கோ.,
14, பந்தர் தெரு :: மதராஸ்

A GENTS WATCH

No 20 with centre second 30/-
No. 31 (Superior) with centre second 38/8
No 7 No centre second 22/-
(Guaranteed [illegible] years)
One plastic strap & a velvet case supplied free with each. Postage Re. 1/- extra. Free for two.

THIS LOVELY WATCH FOR 30/- ONLY

Swiss made, lovely shape as in illustration. Accurate time-keeper. Jewel fitted, strong Lifetime machine, white chromium case fitted with centre second

INDIAN WATCH FEDERATION
Post Bag No 6708 (Sec 76) CALCUTTA.



## குலதனம்

போலக் கேச தனமும், சில குடும்பங்களில் பரம்பரையாக வருவதுண்டு. கேச தனம் படைத்தவர், அது நஷ்டமாகாமல் **கேசவர்த்தினி**யைக் கொண்டு காப்பாற்றுங்கள். படைக்காதவர் **கேசவர்த்தினி**யைக் கொண்டு அதை அடையுங்கள். சிறு வயது முதல் **கேசவர்த்தினி** ஒன்றையே உபயோகித்து வருவதால், இள நரை வழுக்கைகளைத் தடுத்துக் கேச ஆரோக்யத்தையும் கேச சம்பத்தையும் தவறுமல் பெறுங்கள்.

மெலிந்து இளைத்த சிறுவனும் தேகப்பயிற்சி ஆதாரங்களால் பருத்து அழகிய சதைக் கட்டைப் பெறுவது போல, அற்ப கூந்தல் படைத்தவரும் "**கேசவர்த்தினி**"யைக் கொண்டு அபாரிமிதமான கூந்தலைப் பெறலாம்.

குழந்தையின் கூந்தலைக் கேசவர்த்தினி கொண்டே விருத்திசெய்யுங்கள்.

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது

**விலை அணா 14**

(மேற் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்:

**தென் இந்திய ரஸாயனசாலை.**
**கிராஸ் கட் ரோடு, கோயமுத்தூர்**

# இதய நோயா?

....என்ன செய்யவென்று கூறவேன்



இவ்வுபாதைகள் அதிகோரமானவை என்று நானறிவேன். மிக அசாதாரணமாகவும், ஊணுக்குப் பின் வயிற்றில் அதிரணம், உபபுர உணர்வுகளைத் தரும் அமிலத்தின் சேர்க்கையாலேயே இவ்வுபாதைகள் ஏற்படுகின்றன. விஷ அமிலங்களுக்கு மாற்று, எப்போதும் போல ஜீரண சக்தி யளிப்பது, என உடனடியாக பிஸ்மாகை சிபார்சு செய்கிறேன். 3 நிமிஷத்தில் வலி இடைஞ்சலின்றி ஜீரணமாக உதவுகிறது. இன்று பரிக்ஷியுங்கள்.

உங்களுக்கு வேண்டியது

**BISMAG**

எல்லா கெமிஸ்டுகளிடமும் ஸ்டோர்களிலும் பவுடராகவும் மாத்திரையாகவும் கிடைக்கும்.

இந்தியாவுக்கு பூரண விநியோகஸ்தர்கள்:

**ஜியப்ரே மானர்ஸ் & கோ., லிட்.**
பம்பாய்-கல்கத்தா-டெல்லி-மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

# கல்கி



KALKI ஏப்ரல் 3, 1949 4 அணா

REGD. NO. M. 4392

"இதோ... புதிய லக்ஸ் டாய்லட் சோப்!"




☆ சினிமா நட்சத்திரங்களின் அழகுதரும் சோப் ☆